# திருக்குறள்

## மூலம்

### ஆராய்ச்சிக் குறிப்புக்களுடன்



# முன்னுரை

தமிழ், திருவள்ளுவர் இயற்றிய திருக்குறளை உடைத்து. இந்நூல் பதினெண்-கீழ்கணக்கு நூல்களில் ஒன்று. இது உலகம் திரமுறத் தேர்ந்து தெளியமொழியப் பட்ட பொய்யாமொழி; ஆதலால், உலக நூல்களில் தலை சிறந்தது. புலவர் ஆராயும் தொறும் அறிவு ஊறும் தன்மையது. இதன்பால் எல்லாப் பொருளுமுள. நூலின் இயற்கைப் பெயரும், இயற்றிய ஆசிரியரின் இயற்கைப் பெயரும் தெரியவில்லை.

இது 1330 குறள் வெண்பாக்களால் ஆக்கப்பட்டது. 133 அதிகாரங்களைக் கொண்டது. எந்த அதிகாரத்திலும் பத்தே குறள்கள்தான் உண்டு. அறம், பொருள், இன்பம் என்ற மூன்று பால்களின் இயல் பிரிவு வருமாறு:—

அறத்துப்பால்: பாயிரம் (4) இல்லறவியல் (20) துறவற வியல் (13) ஊழ் (1) ஆக 38 அதிகாரங்களைக் கொண்ட நான்கு இயல்களாக பாகுபாடு செய்யப்பெற்றது.

பொருட்பால்: அரசியல் (25) அங்கவியல் (32) ஒழிபியல் (13) ஆக 70 அதிகாரங்கள் கொண்ட முப்பிரிவுகளாகக் கொள்வது இக்கால வழக்கு. அமைச்சியல் (10) அரண் இயல் (2) கூழ் இயல் (1) படை இயல் (2) நட்பு இயல் (17) குடி இயல் (13) ஆக 70 அதிகாரங்கள் கொண்ட ஏழு இயல்கள் என்ற பழைய முறை ஒன்று உண்டு. குடி இயலை

ஒழிபியலாகக் கொள்வது இன்றைய நடைமுறை. மணக்குடவர் அரசியல் (25) அமைச்சியல் (10) குடியியல் (13) என்ற பழைய அமைப்பை அப்படியே கொண்டு, அரண் (2) கூழ் (1) படை (2) என்ற மூன்றினையும் பொருளியல் என்று ஒன்றாக வகுத்து மேற்கண்ட 5 அதிகாரங்களையும்



உள் அடக்கினார். நட்பியல் 17யை நட்பியல் வியல் 12 என்று இருகூறாக வகுத்தார்.

5 துன்ப

காமத்து(இன்பம்)ப் பால் : களவியல் 7, கற்பியல் 18 என இரண்டே இயல்களாக நடைபெறுகிறது. இப்பாலை ஆண்பால் கூற்று 7, பெண்பால் கூற்று 12, இருவர் கூற்று 6 ஆக 25 என்றும், அருமையிற் கூடல் 3, பிரிந்து கூடல் 18, ஊடிக் கூடல் 4 ஆக 25 என்றும், இருவகையாகக் கொண்ட பழைய முறைகளும் உண்டு.

திருக்குறள் போன்ற நூல் எம்மொழியிலும் இல்லை. ஆகையால்தான், பிற மொழியினர் திருக்குறளின் சிறப்பு அறியும் முகமாக தமிழின் சிறப்பு அறிகிறார்கள். சங்க கால புலவர்களுக்கோ, திருமுருகாற்றுப்படை ஒழிந்த ஏனைய சங்ககால நூல்களுக்கோ திரு என்ற அடைமொழி கொடுத்து வழங்கினாரில்லை. அகத்தியர், தொல்காப்பியர் செய்த நூல்களுக்கு அகத்தியம், தொல்காப்பியம் என்று ஈறுதிரித்து பெயரிட்டனர். ஆனால் திருவள்ளுவர் யாத்த இந்நூலுக்கு திருவள்ளுவர் என்றே கருத்தாவாகுபெயருக்கு எடுத்துக் காட்டாகப் பெயரிட்டனர்.

தமிழ்ப் பாவினத்தில் வெண்பா முதலில் நிற்பது. வெண்பாவில் முதல்வகை குறள் வெண்பா. இப்பாவினத்தால் ஆக்கப்பட்டதால் குறள் என்ற பெயரைப் பெற்றது. குறட்பாவில் 1330 பாக்களைக் கொண்டு அமைந்த வேறு தமிழ் நூல் இல்லை. திருக்குறளுக்கு முன் இருந்ததாகவும் தெரியவில்லை. இதற்கு உரை வகுத்தார் பலர். இதனைப் போற்றி ஆளாத நூலாசிரியர்களோ உரை ஆசிரியர்களோ இல்லை.

சங்க காலத்தில் வள்ளுவன் என்ற பெயர் ஒரு குலத்தினரைக் குறிக்க வழங்கவில்லை. அப்பெயர் அரசரின் கருமத் தலைவருள் ஒருவரைக் குறிப்பது, திவாகர நூலில்

நாகனார், கருவூர்க் கதப்பிள்ளை, ஒருசிறைப் பெயரினார் பாடிய நாஞ்சிற் குரிசிலை வள்ளுவன் என்று சுட்டப்படுவதால் அது இயற்பெயர் அல்லது உள்படு கருமத் தலைவர் பதவியிலிருந்து பெற்ற பட்டப்பெயராதல் வேண்டும். தருக்க முறையாக இவர் இன்ன சமயத்தவர்தான் என்று துணிய முடியாது. தொல்காப்பியத்திலுள்ள 'நிறைமொழி மாந்த ராணையிற் கிளந்த, மறை மொழிதானே மந்திர மென்ப' என்ற சூத்திரத்தை திருவள்ளுவர் 'நிறைமொழி மாந்தர் பெருமை, நிலத்து மறைமொழி காட்டி விடும்' எனப் போற்றி ஆண்டுள்ளார். கலித்தொகை, புறநானூறு, நற்றிணை முதலிய சங்க நூல்களில் திருக்குறள் வரிகள் எடுத்தாளப்படுவதால் திருக்குறளின் காலம் இந்நூல்களின் காலத்திற்கு முன்பு என்று பெறப்படுகிறது. வள்ளுவர் ஆண்டு என்பது கிருத்துவ ஆண்டிற்கு முப்பது ஆண்டுகளுக்கு முற்பட்டது.

இப்பதிப்பு, திருக்குறள் வாழ்நாளில் பயில வேண்டிய நூல் எனக் கொண்டு பலகால் துருவிப் படிப்பார்க்கு துணையாக வெளியிடப்பெற்றது. ஆராய்வாருக்கு உற்ற துணையாக இதில் பல பாகுபாடுகளும் குறிப்புகளும் காணலாம். நூலாசிரியர்கள், உரையாசிரியர்கள் ஆண்ட குறள்களின் பட்டியலும் பிறவும் தனியே வெளிவரும். திருக்குறள் உலகத்தார் இவற்றை ஆதரிப்பார்களென நம்புகிறோம்.

26 - 1 - '50 பொதிகைப் பதிப்பகம்

லிமிடெட்.

# பொருள்



# டக்கம்

பக்கம்





திருக்குறளாண்ட நூல்களிலுள்ள குறள் குறிப்புகள்

அடக்கமுடைமை
அமைச்சு
அரண்
அருளுடைமை
அலரறிவுறுத்தல்
அவர்வயின்விதும்பல்
அவாவறுத்தல்
அவையஞ்சாமை
அவையறிதல்
அழுக்காறாமை
அறன்வலியுறுத்தல்
அறிவுடைமை
அன்புடைமை

ஆள்வினையுடைமை

இகல்

இடனறிதல்

இடுக்கணழியாமை

இரவச்சம்

இரவு

இல்வாழ்க்கை

இறைமாட்சி

இனியவை கூறல்

இன்னாசெய்யாமை

ஈகை

உட்பகை

உழவு

உறுப்புநலனழிதல்

ஊக்கமுடைமை

ஊடலுவகை

ஊழ்

ஒப்புரவறிதல்

ஒழுக்கமுடைமை

ஒற்றாடல்

கடவுள் வாழ்த்து

கண்ணோட்டம்

அதிகார

தெரிந்துதெளிதல்

தெரிந்துவினையாடல்

நடுவுநிலைமை

நட்பாராய்தல்

நட்பு

நலம்புனைந்துரைத்தல்

நல்குரவு

நன்றியில்செல்வம்

நாடு
நாணுடைமை
நாணுத்துறவுரைத்தல்
நிலையாமை
நிறையழிதல்
நினைந்தவர்புலம்பல்
நீத்தார்பெருமை
நெஞ்சொடுகிளத்தல்
நெஞ்சொடுபுலத்தல்
பகைத்திறந்தெரிதல்
படைமாட்சி

பசப்புறுபருவரல்

படர்மெலிந்திரங்கல்

படைச்செருக்கு

படைமாட்சி

பண்புடைமை

பயனிலசொல்லாமை

பழமை

பிரிவாற்றாமை

பிறனில்விழையாமை

புகழ்

## 1. கடவுள் வாழ்த்து.

1. அகரம் முதல எழுத்தெல்லாம்; ஆதி
பகவன் முதற்றே உலகு.

2.

கற்றதனால் ஆய பயன்என்கொல்? வாலறிவன்
நற்றாள் தொழாஅர் எனின்.

3. மலர்மிசை ஏகினான் மாண்அடி சேர்ந்தார்
நிலமிசை நீடுவாழ் வார்.

4. வேண்டுதல் வேண்டாமை இலானடி
சேர்ந்தார்க்
யாண்டும் இடும்பை இல.

5. இருள்சேர் இருவினையும் சேரா; இறைவன்
பொருள்சேர் புகழ்புரிந்தார் மாட்டு.

6. பொறிவாயில் ஐந்தவித்தான் பொய்தீர் ஒழுக்கம்
நெறிநின்றார் நீடுவாழ் வார்.

7. தனக்குவமை இல்லாதான் தாள்சேர்ந்தார்க்
கல்லால்
மனக்கவலை மாற்றல் அரிது.

8. அறஆழி அந்தணன் தாள்சேர்ந்தார்க் கல்லால்
பிறஆழி நீந்தல் அரிது.

9. கோளில் பொறியில்
குணம்இலவே; எண்குணத்தான்
தாளை வணங்காத் தலை.

10. பிறவிப் பெருங்கடல் நீந்துவர்; நீந்தார்

இறைவன் அடிசேரா தார்.

## 2. வான் சிறப்பு.

11. வான்நின் றுலகம் வழங்கி வருதலால்
தான்அமிழ்தம் என்றுணரல் பாற்று.

12. துப்பார்க்குத் துப்பாய துப்பாக்கித் துப்பார்க்குத்
துப்பாய தூஉம் மழை.



13. விண்இன்று பொய்ப்பின் விரிநீர் வியனுலகத்
துள்நின் றுடற்றும் பசி.

14. ஏரின் உழாஅர் உழவர்; புயல்என்னும்
வாரி வளம்குன்றிக் கால்.

15. கெடுப்பதூஉம் கெட்டார்க்குச் சார்வாய்மற் றாங்கே
எடுப்பதூஉம் எல்லாம் மழை.

16. விசும்பில் துளிவீழின் அல்லால்மற் றாங்கே
பசும்புல் தலைகாண் பரிது.

17. நெடுங்கடலும் தன்நீர்மை குன்றும் ;
தடிந்தெழிலி
தான்நல்கா தாகி விடின்.

18. சிறப்பொடு பூசனை செல்லாது ; வானம்
வறக்குமேல் வானோர்க்கும் ஈண்டு.

19. தானம் தவம்இரண்டும் தங்கா வியன்உலகம்
வானம் வழங்கா தெனின்.

20.

நீர்இன் றமையா துலகெனின் யார்யார்க்கும்
வான்இன் றமையா தொழுக்கு.

## 3. நீத்தார் பெருமை.

21. ஒழுக்கத்து நீத்தார் பெருமை விழுப்பத்து
வேண்டும் பனுவல் துணிவு.

22. துறந்தார் பெருமை துணைக்கூறின், வையத்
திறந்தாரை எண்ணிக்கொண் டற்று.

23. இருமை வகைதெரிந் தீண்டறம் பூண்டார்
பெருமை பிறங்கிற் றுலகு.

24. உரனென்னும் தோட்டியான் ஓரைந்தும் காப்பான்
வரனென்னும் வைப்புக்கோர் வித்து. 25.

ஐந்தவித்தான் ஆற்றல் அகல்விசும்பு ளார்கோமான்
இந்திரனே சாலும் கரி.

பால்] 4. அறன் வலியுறுத்தல்
3

26. செயற்கரிய செய்வார் பெரியர்; சிறியர்
செயற்கரிய செய்கலா தார். 27.
சுவைஒளி ஊறோசை நாற்றமென் றைந்தின்
வகைதெரிவான் கட்டே உலகு.
28. நிறைமொழி மாந்தர் பெருமை நிலத்து
மறைமொழி காட்டி விடும்.
29. குணமென்னும் குன்றேறி நின்றார் வெகுளி
கணமேயும் காத்தல் அரிது. 30.
அந்தணர் என்போர் அறவோர்மற் றெவ்வுயிர்க்கும்
செந்தண்மை பூண்டொழுக லான்.

## 4. அறன் வலியுறுத்தல்.

**31.** சிறப்பீனும்; செல்வமும் ஈனும்;
அறத்தினூஉங்கு

ஆக்கம் எவனோ உயிர்க்கு.

**32.** அறத்தினூஉங் காக்கமும் இல்லை; அதனை
மறத்தலின் ஊங்கில்லை கேடு.

**33.** ஒல்லும் வகையான் அறவினை ஓவாதே
செல்லும்வாய் எல்லாம் செயல்.

**34.** மனத்துக்கண் மாசிலன் ஆதல்;
அனைத்தறன்;

ஆகுல நீர பிற.

**35.** அழுக்கா றவாவெகுளி இன்னாச்சொல்
நான்கும்

இழுக்கா இயன்ற தறம்.

**36.** அன்றறிவாம் என்னா தறஞ்செய்க; மற்றது
பொன்றுங்கால் பொன்றாத் துணை.

**37.** அறத்தா றிதுஎன வேண்டா சிவிகை
பொறுத்தானோ டூர்ந்தான் இடை.

**38.** வீழ்நாள் படாஅமை நன்றாற்றின்
அஃதொருவன்

வாழ்நாள் வழியடைக்கும் கல்.



39. அறத்தான் வருவதே இன்பம்; மற் றெல்லாம்
புறத்த; புகழும் இல.

40 செயற்பால தோரும் அறனே; ஒருவற்
குயற்பால தோரும் பழி.

## 5. இல்வாழ்க்கை.

41.

இல்வாழ்வான் என்பான் இயல்புடைய மூவர்க்கும்
நல்லாற்றின் நின்ற துணை.

42. துறந்தார்க்கும் துவ்வா தவர்க்கும் இறந்தார்க்கும்
இல்வாழ்வான் என்பான் துணை.

43. தென்புலத்தார் தெய்வம் விருந்தொக்கல் தானென்றாங்
கைம்புலத்தா றோம்பல் தலை.

44. பழிஅஞ்சிப் பாத்தூண் உடைத்தாயின்

வாழ்க்கை

வழிஎஞ்சல் எஞ்ஞான்றும் இல்.

**45.** அன்பும் அறனும் உடைத்தாயின் இல்வாழ்க்கை

பண்பும் பயனும் அது.

**46.** அறத்தாற்றின் இல்வாழ்க்கை ஆற்றின் புறத்தாற்றின்

போஒய்ப் பெறுவ தெவன்.

**47.**

இயல்பினான் இல்வாழ்க்கை வாழ்பவன் என்பான் முயல்வாருள் எல்லாம் தலை.

**48.** ஆற்றின் ஒழுக்கி அறன்இழுக்கா இல்வாழ்க்கை

நோற்பாரின் நோன்மை உடைத்து.

**49.** அறம்எனப் பட்டதே இல்வாழ்க்கை ; அஃதும்

பிறன்பழிப்ப தில்லாயின் நன்று.

**50.** வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வான்உறையும்
தெய்வத்துள் வைக்கப் படும்.



## 6. வாழ்க்கைத்துணை நலம்.

**51.** மனைத்தக்க மாண்புடையள் ஆகித்தன் கொண்டான்
வளத்தக்காள் வாழ்க்கைத் துணை.

**52.** மனைமாட்சி இல்லாள்கண் இல்லாயின் வாழ்க்கை
எனைமாட்சித் தாயினும் இல்.

**53.** இல்லதென் இல்லவள் மாண்பானல் உள்ளதென்
இல்லவள் மாணுக் கடை.

**54.** பெண்ணின் பெருந்தக்க யாஉள கற்பென்னும்
திண்மைஉண் டாகப் பெறின்.

**55.** தெய்வம் தொழாஅள் கொழுநன் தொழுதெழுவாள்
பெய்யெனப் பெய்யும் மழை.

56. தன்காத்துத் தன்கொண்டான் பேணித்
தகைசான்ற
சொல்காத்துச் சோர்விலாள் பெண்.

57. சிறைகாக்கும் காப்பெவன் செய்யும்? மகளிர்
நிறைகாக்கும் காப்பே தலை.

58. பெற்ருர்ப் பெறின்பெறுவர் பெண்டிர்
பெருஞ்சிறப்புப்
புத்தேளிர் வாழும் உலகு.

59. புகழ்புரிந் தில்லிலோர்க் கில்லை
இகழ்வார்முன்
ஏறுபோல் பீடு நடை.

60. மங்கலம் என்ப மனைமாட்சி மற்றதன்
நன்கலன் நன்மக்கள் பேறு.

## 7. மக்கட் பேறு.

61.
பெறும்அவற்றுள் யாம்அறிவ தில்லை அறிவறிந்த
மக்கள்பே றல்ல பிற.

62. எழுபிறப்பும் தீயவை தீண்டா பழிபிறங்காப்
பண்புடை மக்கள் பெறின்.

63. தம்பொருள் என்பதம் மக்கள் அவர்பொருள்
தம்தம் வினையால் வரும்.

64. அமிழ்தினும் ஆற்ற இனிதேதம் மக்கள்
சிறுகை அளாவிய கூழ்.

65. மக்கள்மெய் தீண்டல் உடற்கின்பம்; மற்றவர்
சொற்கேட்டல் இன்பம் செவிக்கு.

66. குழலினிது யாழினி தென்பதம் மக்கள்
மழலைச்சொல் கேளா தவர்.

67. தந்தை மகற்காற்றும் நன்றி அவையத்து
முந்தி இருப்பச் செயல்.

68. தம்மில்தம் மக்கள் அறிவுடைமை மாநிலத்து
மன்னுயிர்க் கெல்லாம் இனிது.

69. ஈன்ற பொழுதில் பெரிதுவக்கும் தன்மகனைச்
சான்றோன் எனக்கேட்ட தாய்.

70. மகன்தந்தைக் காற்றும் உதவி இவன்தந்தை
என்னோற்றான் கொல்எனும் சொல்.

## 8. அன்புடைமை.

71. அன்பிற்கும் உண்டோ அடைக்கும்தாழ் ஆர்வலர்
புன்கணீர் பூசல் தரும்.

72. அன்பிலார் எல்லாம் தமக்குரியர்; அன்புடையார்
என்பும் உரியர் பிறர்க்கு.

73. அன்போ டியைந்த வழக்கென்ப ஆர்உயிர்க்
கென்போ டியைந்த தொடர்பு.

74. அன்பீனும் ஆர்வம் உடைமை; அதுஈனும்
நண்பென்னும் நாடாச் சிறப்பு.

75. அன்புற் றமர்ந்த வழக்கென்ப வையகத்
தின்புற்றார் எய்தும் சிறப்பு.

பால்]
7

## 9. விருந்தோம்பல்.

76. அறத்திற்கே அன்புசார் பென்ப அறியார்;
மறத்திற்கும் அஃதே துணை.

77. என்பி லதனை வெயில்போலக் காயுமே
அன்பி லதனை அறம்.

78. அன்பகத் தில்லா உயிர்வாழ்க்கை வன்பால்கண்
வற்றல் மரம்தளிர்த் தற்று.

79. புறத்துறுப் பெல்லாம் எவன்செய்யும் யாக்கை
அகத்துறுப் பன்பி லவர்க்கு

80. அன்பின் வழிய துயிர்நிலை அஃதிலார்க்
கென்புதோல் போர்த்த உடம்பு.

## 9. விருந்தோம்பல்.

81.

இருந்தோம்பி இல்வாழ்வ தெல்லாம் விருந்தோம்பி
வேளாண்மை செய்தல் பொருட்டு.

82. விருந்து புறத்ததாத் தானுண்டல் சாவா
மருந்தெனினும் வேண்டற்பாற் றன்று.

83. வருவிருந்து வைகலும் ஓம்புவான் வாழ்க்கை
பருவந்து பாழ்படுதல் இன்று.

84. அகன்அமர்ந்து செய்யாள் உறையும்; முகன்அமர்ந்து
நல்விருந் தோம்புவான் இல்.

85. வித்தும் இடல்வேண்டும் கொல்லோ? விருந்தோம்பி
மிச்சில் மிசைவான் புலம்.

86. செல்விருந் தோம்பி வருவிருந்து பார்த்திருப்பான்
நல்விருந்து வானத் தவர்க்கு.

87. இனைத்துணைத் தென்பதொன் றில்லை விருந்தின்
துணைத்துணை வேள்விப் பயன்.

88. பரிந்தோம்பிப் பற்றற்றேம் என்பர் விருந்தோம்பி
வேள்வி தலைப்படா தார்.



89. உடைமையுள் இன்மை விருந்தோம்பல் ஓம்பா
மடமை மடவார்கண் உண்டு.

90. மோப்பக் குழையும் அனிச்சம் முகந்திரிந்து
நோக்கக் குழையும் விருந்து.

## 10 இனியவை கூறல்

91. இன்சொலால் ஈரம் அளைஇப் படிறிலவாம்

செம்பொருள் கண்டார்வாய்ச் சொல்.

92. அகன்அமர்ந் தீதலின் நன்றே முகனமர்ந்
இன்சொலன் ஆகப் பெறின்.

93. முகத்தான் அமர்ந்தினிது நோக்கி அகத்தானாம்

இன்சொ லினதே அறம்.

94. துன்புறூஉம் துவ்வாமை இல்லாகும் யார்மாட்டும்

இன்புறூஉம் இன்சொ லவர்க்கு.

95. பணிவுடையன் இன்சொலன் ஆதல் ஒருவர்க்
கணி;அல்ல மற்றுப் பிற.

96. அல்லவை தேய அறம்பெருகும் நல்லவை
நாடி இனிய சொலின்.

97. நயன்ஈன்று நன்றி பயக்கும் பயன்ஈன்று
பண்பில் தலைப்பிரியாச் சொல்.

98. சிறுமையுள் நீங்கிய இன்சொல் மறுமையும்
இம்மையும் இன்பம் தரும்.

99. இன்சொல் இனிதீன்றல் காண்பான்
எவன்கொலோ

வன்சொல் வழங்கு வது.

100. இனிய உளவாக இன்னாத கூறல்
கனிஇருப்பக் காய்கவர்ந் தற்று.



## 11. செய்ந்நன்றி அறிதல்.

101. செய்யாமல் செய்த உதவிக்கு வையகமும்
வானகமும் மாற்றல் அரிது.

102. காலத்தி னால்செய்த நன்றி சிறிதெனினும்
ஞாலத்தின் மாணப் பெரிது.

103. பயன்தூக்கார் செய்த உதவி நயன்தூக்கின்
நன்மை கடலில் பெரிது.

104. தினைத்துணை நன்றி செயினும் பனைத்துணையாக்
கொள்வர் பயன்தெரி வார்.

105. உதவி வரைத்தன் றுதவி; உதவி
செயப்பட்டார் சால்பின் வரைத்து.

106. மறவற்க மாசற்றார் கேண்மை துறவற்க
துன்பத்துள் துப்பாயார் நட்பு.

107. எழுமை எழுபிறப்பும் உள்ளுவர் தங்கண்
விழுமம் துடைத்தவர் நட்பு.

108. நன்றி மறப்பது நன்றன்று நன்றல்ல
தன்றே மறப்பது நன்று.

109. கொன்றன்ன இன்னா செயினும் அவர்செய்த
ஒன்றுநன் றுள்ளக் கெடும்.

110. எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம் உய்வில்லை
செய்ந்நன்றி கொன்ற மகற்கு.

## 12. நடுவு நிலைமை.

111. தகுதி எனஒன்று நன்றே பகுதியால்
பாற்பட் டொழுகப் பெறின்.

112. செப்பம் உடையவன் ஆக்கம் சிதைவின்றி

எச்சத்திற் கேமாப் புடைத்து.
2



113. நன்றே தரினும் நடுவிகந்தாம் ஆக்கத்தை
அன்றே ஒழிய விடல்.

114. தக்கார் தகவிலர் என்ப தவரவர்
எச்சத்தால் காணப் படும்.

115. கேடும் பெருக்கமும் இல்அல்ல; நெஞ்சத்துக்
கோடாமை சான்றோர்க் கணி.

116. கெடுவல்யான் என்ப தறிகதன் நெஞ்சம்
நடுவொரீஇ அல்ல செயின்.

117. கெடுவாக வையா துலகம் நடுவாக
நன்றிக்கண் தங்கியான் தாழ்வு.

118. சமன்செய்து சீர்தூக்கும்
கோல்போல்அமைந்தொருபால்
கோடாமை சான்றோர்க் கணி.

119. சொற்கோட்டம் இல்லது செப்பம் ஒருதலையா
உள்கோட்டம் இன்மை பெறின்.

120. வாணிகம் செய்வார்க்கு வாணிகம் பேணிப்

பிறவும் தமபோல் செயின்.

## 13. அடக்க முடைமை.

**121.** அடக்கம் அமரருள் உய்க்கும் ; அடங்காமை
ஆர்இருள் உய்த்து விடும்.

**122.** காக்க பொருளா அடக்கத்தை ஆக்கம்
அதனின்ஊங் கில்லை உயிர்க்கு.

**123.** செறிவறிந்து சீர்மை பயக்கும் அறிவறிந்
தாற்றின் அடங்கப் பெறின்.

**124.** நிலையில் திரியா தடங்கியான் தோற்றம்
மலையினும் மாணப் பெரிது.

**125.**
எல்லார்க்கும் நன்றும் பணிதல் ; அவருள்ளும்
செல்வர்க்கே செல்வம் தகைத்து.

பால்]
11

## 14. ஒழுக்கமுடைமை.

**126.** ஒருமையுள் ஆமைபோல் ஐந்தடக்கல்
ஆற்றின்
எழுமையும் ஏமாப் புடைத்து.

**127.** யாகாவரா ஆயினும் நாகாக்க ; காவாக்கால்
சோகாப்பர் சொல்லிழுக்குப் பட்டு.

128. ஒன்றுனும் தீச்சொல் பொருள்பயன் உண்டாயின்

நன்றுகா தாகி விடும்.

129. தீயினுல் சுட்டபுண் உள்ளாறும் ; ஆறுதே
நாவினுல் சுட்ட வடு.

130. கதம்காத்துக் கற்றடங்கல் ஆற்றுவான் செவ்வி
அறம்பார்க்கும் ஆற்றின் நுழைந்து.

## 14. ஒழுக்கமுடைமை. 131.

ஒழுக்கம் விழுப்பம் தரலான் ஒழுக்கம்
உயிரினும் ஓம்பப் படும்.

132. பரிந்தோம்பிக் காக்க ஒழுக்கம் ; தெரிந்தோம்பித்
தேரினும் அஃதே துணை.

133. ஒழுக்கம் உடைமை குடிமை ; இழுக்கம்
இழிந்த பிறப்பாய் விடும்.

134. மறப்பினும் ஓத்துக் கொளலாகும் பார்ப்பான்
பிறப்பொழுக்கம் குன்றக் கெடும்.

135. அழுக்கா றுடையான்கண் ஆக்கம்போன் றில்லை
ஒழுக்க மிலான்கண் உயர்வு.

136. ஒழுக்கத்தின் ஒல்கார் உரவோர் இழுக்கத்தின்

ஏதம் படுபாக் கறிந்து.

137. ஒழுக்கத்தின் எய்துவர் மேன்மை; இழுக்கத்தின்
எய்துவர் எய்தாப் பழி.

138. நன்றிக்கு வித்தாகும் நல்லொழுக்கம்; தீயொழுக்கம்
என்றும் இடும்பை தரும்.



139. ஒழுக்கம் உடையவர்க்கு ஒல்லாவே தீய
வழுக்கியும் வாயால் சொலல்.

140. உலகத்தோ டொட்ட ஒழுகல் பலகற்றும்
கல்லார் அறிவிலா தார்.

## 15. பிறன் இல்விழையாமை.

141. பிறன்பொருளாள் பெட்டொழுகும் பேதைமை ஞாலத்
தறம்பொருள் கண்டார்கண் இல்.

142. அறன்கடை நின்றாருள் எல்லாம் பிறன்கடை

நின்றாரில் பேதையார் இல்.

**143.** விளிந்தாரின் வேறல்லர் மன்ற தெளிந்தாரில்
தீமை புரிந்தொழுகு வார்.

**144.** எனைத்துணையர் ஆயினும் என்னாம்?
தினைத்துணையும்
தேரான் பிறன்இல் புகல்.

**145.** எளிதென இல்இறப்பான் எய்தும்எஞ்
ஞான்றும்
விளியாது நிற்கும் பழி.

**146.** பகைபாவம் அச்சம் பழியென நான்கும்
இகவாவாம் இல்இறப்பான் கண்.

**147.**
அறன்இயலான் இல்வாழ்வான் என்பான் பிறன்
பெண்மை நயவா தவன்.
[இயலாள்

**148.** பிறன்மனை நோக்காத பேராண்மை
சான்றோர்க்
கறன்ஒன்றோ? ஆன்ற ஒழுக்கு.

**149.** நலக்குரியார் யார்எனின் நாமநீர் வைப்பில்
பிறர்க்குரியாள் தோள்தோயா தார்.

**150.** அறன்வரையான் அல்ல செயினும்

பிறன்வரையாள்

பெண்மை நயவாமை நன்று.

பால்] 16. பொறை யுடைமை.

13

## 16. பொறை யுடைமை.

151. அகழ்வாரைத் தாங்கும் நிலம்போலத் தம்மை
இகழ்வார்ப் பொறுத்தல் தலை.

152. பொறுத்தல் இறப்பினை என்றும்; அதனை
மறத்தல் அதனினும் நன்று.

153. இன்மையுள், இன்மை விருந்தோரால்;
வன்மையுள்
வன்மை மடவார்ப் பொறை.

154. 'நிறைஉடைமை நீங்காமை வேண்டின் பொறை
போற்றி ஒழுகப் படும்.

உடைமை 155. ஒறுத்தாரை ஒன்றாக வையாரே;
வைப்பர்
பொறுத்தாரைப் பொன்போல் பொதிந்து. 156.
ஒறுத்தார்க் கொருநாளை இன்பம்; பொறுத்தார்க்குப்
பொன்றும் துணையும் புகழ்.

157. திறன்அல்ல தன்பிறர் செய்யினும் நோநொந்
தறன்அல்ல செய்யாமை நன்று.

158. மிகுதியால் மிக்கவை செய்தாரைத் தாம்தம்
தகுதியால் வென்று விடல்.

159. துறந்தாரில் தூய்மை உடையர் இறந்தார்வாய்
இன்னாச்சொல் நோற்கிற் பவர்.

160. உண்ணாது நோற்பார் பெரியர்; பிறர்சொல்லும்
இன்னாச்சொல் நோற்பாரின் பின்.

## 17. அழுக்காறாமை.

161. ஒழுக்காறாக் கொள்க ஒருவன்தன் நெஞ்சத்
தழுக்கா றிலாத இயல்பு.

162.
விழுப்பேற்றின் அஃதொப்ப தில்லையார் மாட்டும்
அழுக்காற்றின் அன்மை பெறின்.



163. அறன் ஆக்கம் வேண்டாதான் என்பான்; பிறன்
பேணா தழுக்கறுப் பான்.

ஆக்கம்

164. அழுக்காற்றின் அல்லவை செய்யார்;
இழுக்காற்றின்
ஏதம் படுபாக் கறிந்து.

165. அழுக்கா றுடையார்க் கதுசாலும் ஒன்னார்
வழுக்கியும் கேடீன் பது.

166. கொடுப்ப தழுக்கறுப்பான் சுற்றம் உடுப்பதூஉம்
உண்பதூஉம் இன்றிக் கெடும்.

167. அவ்வித் தழுக்கா றுடையானைச் செய்யவள்
தவ்வையைக் காட்டி விடும்.

168. அழுக்கா றெனஒரு பாவி திருச்செற்றுத்
தீஉழி உய்த்து விடும்.

169. அவ்விய நெஞ்சத்தான் ஆக்கமும் செவ்வியான்
கேடும் நினைக்கப் படும்.

170. அழுக்கற் றகன்றாரும் இல்லை; அஃ தில்லார்
பெருக்கத்தில் தீர்ந்தாரும் இல்.

## 18. வெஃகாமை.

171. நடுவின்றி நன்பொருள் வெஃகின்
குடிபொன்றிக்
குற்றமும் ஆங்கே தரும்.

172. படுபயன் வெஃகிப் பழிப்படுவ செய்யார்
நடுஅன்மை நாணு பவர்.

173. சிற்றின்பம் வெஃகி அறன்அல்ல செய்யாரே
மற்றின்பம் வேண்டு பவர்.

174. இலம்என்று வெஃகுதல் செய்யார்
புலம்வென்ற
புன்மையில் காட்சி யவர்.

175. அஃகி அகன்ற அறிவென்னும் யார்மாட்டும்
வெஃகி வெறிய செயின்.

பால்]
15

## 19. புறங்கூறாமை.

176.

அருள்வெஃகி ஆற்றின்கண் நின்றான் பொருள்வெஃகிப்
பொல்லாத சூழக் கெடும்.

177. வேண்டற்க வெஃகிஆம் ஆக்கம்; விளைவயின்
மாண்டற் கரிதாம் பயன்.

178. அஃகாமை செல்வத்திற் கியாதெனின்
வெஃகாமை

179.

வேண்டும் பிறன்கைப் பொருள்.
அறன் அறிந்து வெஃகா அறிவுடையார்ச் சேரும்
திறன்அறிந் தாங்கே திரு.

**180.** இறல்ஈனும் எண்ணாது வெஃகின்; விறல்ஈனும்
வேண்டாமை என்னும் செருக்கு.

## 19. *புறங்கூறாமை.*

**181.** அறம்கூறான் அல்ல செயினும் ஒருவன்
புறங்கூறான் என்றல் இனிது.

**182.** அறன்அழீஇ அல்லவை செய்தலின் தீதே
புறன்அழீஇப் பொய்த்து நகை.

**183.** புறங்கூறிப் பொய்த்துயிர் வாழ்தலின் சாதல்
அறங்கூறும் ஆக்கம் தரும்.

**184.**

கண்நின்று கண்அறச் சொல்லினும் சொல்லற்க
முன்இன்று பின்நோக்காச் சொல்.

**185.** அறம்சொல்லும் நெஞ்சத்தான் அன்மை புறம்
புன்மையால் காணப் படும்.

சோல்லும்

**186.** பிறன்பழி கூறுவன் தன்பழி உள்ளும்
திறன்தெரிந்து கூறப் படும்.

**187.** பகச்சொல்லிக் கேளிர்ப் பிரிப்பர் நகச்சொல்லி
நட்பாடல் தேற்றா தவர்.

**188.** துன்னியார் குற்றமும் தூற்றும் மரபினார்
என்னைகொல் ஏதிலார் மாட்டு.



**189.** அறன்நோக்கி ஆற்றுங்கொல் வையம்
புறன்நோக்கிப்
புன்சொல் உரைப்பான் பொறை.

**190.** ஏதிலார் குற்றம்போல் தம்குற்றம் காண்கிற்பின்
தீதுண்டோ மன்னும் உயிர்க்கு.

## 20. பயன் இல சொல்லாமை.

191. பல்லார் முனியப் பயன்இல சொல்லுவான்
எல்லாரும் எள்ளப் படும்.

192. பயன்இல பல்லார்முன் சொல்லல் நயன்இல
நட்டார்கண் செய்தலின் தீது.

193. நயன்இலன் என்பது சொல்லும் பயன்இல
பாரித் துரைக்கும் உரை.

194. நயன்சாரா நன்மையின் நீக்கும் பயன்சாராப்
பண்பில்சொல் பல்லார் அகத்து.

195. சீர்மை சிறப்பொடு நீங்கும் பயன்இல
நீர்மை உடையார் சொலின்.

196.

பயன்இல்சொல் பாராட்டு வானை மகன்எனல்;
மக்கள் பதடி எனல்.

197. நயன்இல சொல்லினும் சொல்லுக சான்றோர்
பயன்இல சொல்லாமை நன்று.

198. அரும்பயன் ஆயும் அறிவினர் சொல்லார்
பெரும்பயன் இல்லாத சொல்.

199.

பொருள்தீர்ந்த பொச்சாந்தும் சொல்லார் மருள்தீர்ந்த
மாசறு காட்சி யவர்.

**200.** சொல்லுக சொல்லில் பயன்உடைய சொல்லற்க
சொல்லில் பயன்இலாச் சொல்.



## 21. *தீவினை அச்சம்.*

**201.** தீவினையார் அஞ்சார் விழுமியார் அஞ்சுவர்
தீவினை என்னும் செருக்கு.

**202.** தீயவை தீய பயத்தலால் தீயவை
தீயினும் அஞ்சப் படும்.

**203.** அறிவினுள் எல்லாம் தலைஎன்ப தீய
செறுவார்க்கும் செய்யா விடல்.

**204.** மறந்தும் பிறன்கேடு சூழற்க; சூழின்,
அறம்சூழும் சூழ்ந்தவன் கேடு.

**205.** இலன்என்று தீயவை செய்யற்க; செய்யின்
இலன்ஆகும் மற்றும் பெயர்த்து.

**206.** தீப்பால தான்பிறர்கண் செய்யற்க;

கோப்பால

தன்னை அடல்வேண்டா தான்.

**207.** எனைப்பகை உற்ருரும் உய்வர்; வினைப்பகை
வீயாது பின்சென் றடும்.

**208.** தீயவை செய்தார் கெடுதல் நிழல்தன்னை
வீயா தடிஉறைந் தற்று.

**209.** தன்னைத்தான் காதலன் ஆயின்
எனைத்தொன் றும்

துன்னற்க தீவினைப் பால்.

**210.** அரும்கேடன் எனப தறிக மருங்கோடித்
தீவினை செய்யான் எனின்.

## 22. ஒப்புரவறிதல்.

**211.** கைம்மாறு வேண்டா கடப்பாடு; மாரிமாட்
டென்ஆற்றும் கொல்லோ உலகு.

**212.** தாள்ஆற்றித் தந்த பொருள்எல்லாம்
தக்கார்க்கு

வேளாண்மை செய்தல் பொருட்டு.

3

**213.** புத்தேள் உலகத்தும் ஈண்டும் பெறல்அரிதே
ஒப்புரவின் நல்ல பிற.

**214.** ஒத்த தறிவான் உயிர்வாழ்வான்; மற்றையான்
செத்தாருள் வைக்கப் படும்.

**215.** ஊருணி நீர்நிறைந் தற்றே உலகவாம்
பேரறி வாளன் திரு.

**216.** பயன்மரம் உள்ளூர்ப் பழுத்தற்றால் செல்வம்
நயன்உடை யான்கண் படின்.

**217.** மருந்தாகித் தப்பா மரத்தற்றால் செல்வம்
பெருந்தகை யான்கண் படின்.

**218.** இடனில் பருவத்தும் ஒப்புரவிற் கொல்கா
கடன்அறி காட்சி யவர்.

**219.** நயன்உடையான் நல்கூர்ந்தான் ஆதல்
செயும்நீர

செய்யா தமைகலா ஆறு.

**220.**

ஒப்புரவி னல்வரும் கேடெனின் அஃதொருவன்
விற்றுக்கோள் தக்க துடைத்து.

## 23. ஈகை.

**221.** வறியார்க்கொன் றீவதே ஈகை ; மற்
றெல்லாம்
குறிஎதிர்ப்பை நீர துடைத்து.

**222.** நல்லா றெனினும் கொளல்தீது ; மேலுலகம்
இல்லெனினும் ஈதலே நன்று.

**223.** இலன்என்னும் எவ்வம் உரையாமை ஈதல்
குலன்உடையான் கண்ணே உள.

**224.** இன்னா திரக்கப் படுதல் இரந்தவர்
இன்முகம் காணும் அளவு.

**225.** ஆற்றுவார் ஆற்றல் பசியாற்றல்;
மாற்றுவார் ஆற்றலின் பின்.

அப்பசிபை

பால்]
19

## 24. புகழ்.

**226.** அற்றார் அழிபசி தீர்த்தல்; அஃதொருவன்
பெற்றான் பொருள்வைப் புழி.

227. பாத்தூண் மரீஇ யவனைப் பசிஎன்னும்
தீப்பிணி தீண்டல் அரிது.

228.

ஈத்துவக்கும் இன்பம் அறியார்கொல் தாம்உடைமை
வைத்திழக்கும் வன்க ணவர்.

229. இரத்தலின் இன்னாது மன்ற நிரப்பிய
தாமே தமியர் உணல்.

230. சாதலின் இன்னாத தில்லை; இனிததூஉம்
ஈதல் இயையாக் கடை.

## 24. புகழ்.

231. ஈதல் இசைபட வாழ்தல்; அதுவல்ல
தூதியம் இல்லை உயிர்க்கு.

232. உரைப்பார் உரைப்பவை எல்லாம்
இரப்பார்க்கொன்

றீவார்மேல் நிற்கும் புகழ்.

233. ஒன்றா உலகத் துயர்ந்த புகழ்அல்லால்
பொன்றாது நிற்பதொன் றில்.

234. நிலவரை நீள்புகழ் ஆற்றின் புலவரைப்
போற்றாது புத்தேள் உலகு.

235. நத்தம்போல் கேடும் உளதாகும் சாக்காடும்
வித்தகர்க் கல்லால் அரிது.

236. தோன்றின் புகழொடு தோன்றுக;
அஃதிலார்
தோன்றலின் தோன்றாமை நன்று.

237. புகழ்பட வாழாதார் தம்நோவார் தம்மை
இகழ்வாரை நோவ தெவன்?

238. வசைஎன்ப வையத்தார்க் கெல்லாம்
இசைஎன்னும்
எச்சம் பெறாஅ விடின்.



239. வசைஇலா வண்பயன் குன்றும் இசைஇலா
யாக்கை பொறுத்த நிலம்.

240. வசைஒழிய வாழ்வாரே வாழ்வார்; இசை ஒழிய
வாழ்வாரே வாழா தவர்.

## 25. அருளுடைமை.

**241.**

அருள்செல்வம் செல்வத்துள் செல்வம்; பொருள்செல்வம்
பூரியார் கண்ணும் உள.

**242.** நல்ஆற்றான் நாடி அருள்ஆள்க; பல்ஆற்றான்
தேரினும் அஃதே துணை.

**243.** அருள்சேர்ந்த நெஞ்சினார்க் கில்லை இருள்சேர்ந்த
இன்னா உலகம் புகல்.

**244.** மன்உயிர் ஓம்பி அருள்ஆள்வார்க் கில்என்ப
தன்உயிர் அஞ்சும் வினை.

**245.** அல்லல் அருள்ஆள்வார்க் கில்லை; வளிவழங்கும்
மல்லல்மா ஞாலம் கரி.

**246.** பொருள்நீங்கிப் பொச்சாந்தார் என்பர் அருள்நீங்கி
அல்லவை செய்தொழுகு வார்.

**247.** அருள்இலார்க் கவ்வுலகம் இல்லை; பொருளிலார்க்
கிவ்வுலகம் இல்லாகி யாங்கு.

**248.** பொருள்அற்றார் பூப்பர் ஒருகால்; அருள்அற்றார்

அற்றார்;மற் றுதல் அரிது.

249. தெருளாதான் மெய்ப்பொருள் கண்டற்றால் தேரின்

அருளாதான் செய்யும் அறம்.

250. வலியார்முன் தன்னை நினைக்க;தான் தன்னின்

மெலியார்மேல் செல்லும் இடத்து.



## 26. புலால் மறுத்தல்.

251. தன்ஊன் பெருக்கற்குத் தான்பிறி தூன்உண்பான்
எங்ஙனம் ஆளும் அருள்?

252. பொருள்ஆட்சி போற்றாதார்க் கில்லை; அருள்ஆட்சி
ஆங்கில்லை; ஊன்தின் பவர்க்கு.

253. படைகொண்டார் நெஞ்சம்போல் நன்றூக்கா தொன்றன்
உடல்சுவை உண்டார் மனம்.

254. அருள்அல்ல தியாதெனின் கொல்லாமை கோறல்
பொருள்அல்ல தவ்வூன் தினல்.

255. உண்ணாமை உள்ள துயிர்நிலை; ஊன்உண்ண

அண்ணுத்தல் செய்யா தளறு.

256. தினல்பொருட்டால் கொல்லா துலகெனின், யாரும்
விலைப்பொருட்டால் ஊன்தருவார் இல்.

257.

உண்ணுமை வேண்டும் புலாஅல் பிறிதொன்றன்
புண்;அ துணர்வார்ப் பெறின்.

258. செயிரின் தலைப்பிரிந்த காட்சியார் உண்ணூர்
உயிரின் தலைப்பிரிந்த ஊன்.

259. அவிசொரிந் தாயிரம் வேட்டலின் ஒன்றன்

உயிர்செகுத் துண்ணுமை நன்று.

260. கொல்லான் புலாலை மறுத்தானைக் கைகூப்பி
எல்லா உயிரும் தொழும்.

## 27. தவம்.

261. உற்றநோய்நோன்றல் உயிர்க்குறுகண் செய்யாமை
அற்றே தவத்திற் குரு.

262. தவமும் தவமுடையார்க் காகும்; அவம்அதனை
அஃதிலார் மேற்கொள் வது.

263. துறந்தார்க்குத் துப்புரவு வேண்டி
மறந்தார்கொல்

மற்றை யவர்கள் தவம்.

264. ஒன்னார்த் தெறலும் உவந்தாரை ஆக்கலும்
எண்ணில் தவத்தான் வரும்.

265. வேண்டிய வேண்டியாங் கெய்தலால்
செய்தவம்

ஈண்டு முயலப் படும்.

266. தவஞ்செய்வார் தங்கருமஞ் செய்வார்மற்
றல்லார்

அவஞ்செய்வார் ஆசையுள் பட்டு.

267. சுடச்சுடரும் பொன்போல் ஒளிவிடும்
துன்பம் சுடச்சுட நோற்கிற் பவர்க்கு.

268. தன்னுயிர் தான்அறப் பெற்றானை ஏனைய

மன்னுயிர் எல்லாம் தொழும்.

269. கூற்றம் குதித்தலும் கைகூடும் நோற்றலின்

ஆற்றல் தலைப்பட் டவர்க்கு.

270. இலர்பலர் ஆகிய காரணம் நோற்பார்
சிலர்;பலர் நோலா தவர்.

## 28. கூடாஒழுக்கம்.

271. வஞ்ச மனத்தான் படிற்றொழுக்கம்
பூதங்கள்
ஐந்தும் அகத்தே நகும்.

272. வான்உயர் தோற்றம் எவன்செய்யும்
தன்நெஞ்சம்
தான்அறி குற்றம் படின்.

273. வலியில் நிலைமையான் வல்லுருவம்
பெற்றம்
புலியின்தோல் போர்த்துமேய்ந் தற்று.

274. தவம்மறைந்து அல்லவை செய்தல் புதல்மறைந்து
வேட்டுவன் புள்சிமிழ்த் தற்று.

275. பற்றற்றேம் என்பார் படிற்றொழுக்கம்
எற்றெற்றென்

றேதம் பலவும் தரும்.



276. நெஞ்சில் துறவார் துறந்தார்போல் வஞ்சித்து
வாழ்வாரின் வன்கணார் இல்.

277. புறம்குன்றி கண்டனையர் எனும் அகம்குன்றி
மூக்கில் கரியார் உடைத்து.

278. மனத்தது மாசாக மாண்டார்நீர் ஆடி
மறைந்தொழுகும் மாந்தர் பலர்.

279. கணைகொடிது; யாழ்கோடு செவ்விதாங் கன்னர்
வினைபடு பலால் கொளல்.

280. மழித்தலும் நீட்டலும் வேண்டா உலகம்
பழித்த தொழித்து விடின்.

## 29. கள்ளாமை.

281. எள்ளாமை வேண்டுவான் என்பான்
எனைத்தொன்றும்
கள்ளாமை காக்கதன் நெஞ்சு.

282.
உள்ளத்தால் உள்ளலும் தீதே பிறன்பொருளைக்

கள்ளத்தால் கள்வேம் எனல்.

**283.** களவினல் ஆகிய ஆக்கம் அளவிறந்
தாவது போலக் கெடும்.

**284.** களவின்கண் கன்றிய காதல் விளைவின்கண்
வீயா விழுமம் தரும்.

**285.** அருள்கருதி அன்படையர் ஆதல்
பொருள்கருதிப்
பொச்சாப்புப் பார்பபார்கண் இல்.

**286.** அளவின்கண் நின்றொழுகல் ஆற்ருர்
களவின்கண்
கன்றிய காத லவர்.

**287.** களவென்னும் கார்அறி
வாண்மை அளவென்னும்
ஆற்றல் புரிந்தார்கண் இல்.

**288.** அளவறிந்தார் நெஞ்சத் தறம்போல நிற்கும்
களவறிந்தார் நெஞ்சில் கரவு.



**289.** அளவல்ல செய்தாங்கே வீவர் களவல்ல
மற்றைய தேற்ரு தவர்.

290. கள்வார்க்குத் தள்ளும் உயிர்நிலை; கள்ளார்க்குத்
தள்ளாது புத்தேள் உலகு.

## 30. வாய்மை.

291. வாய்மை எனப்படுவ தியாதெனின் எவ்வுயிர்க்கும்
தீமை இலாத சொலல்.

292. பொய்ம்மையும் வாய்மை இடத்த புரைதீர்ந்த
நன்மை பயக்கும் எனின்.

293. தன்நெஞ் சறிவது பொய்யற்க; பொய்த்தபின்
தன்நெஞ்சே தன்னைச் சுடும்.

294. உள்ளத்தால் பொய்யா தொழுகின் உலகத்தார்
உள்ளத்துள் எல்லாம் உளன்.

295. மனத்தொடு வாய்மை மொழியின் தவத்தொடு
தானம்செய் வாரின் தலை.

296. பொய்யாமை அன்ன புகழ்இல்லை; எய்யாமை
எல்லா அறமும் தரும்.

297. பொய்யாமை பொய்யாமை ஆற்றின் அறம்பிற
செய்யாமை செய்யாமை நன்று.

298. புறந்தூய்மை நீரான் அமையும் அகந்தூய்மை
வாய்மையால் காணப் படும்.

299.
எல்லா விளக்கும் விளக்கல்ல; சான்றோர்க்குப்
பொய்யா விளக்கே விளக்கு.

300. யாம்மெய்யாக் கண்டவற்றுள் இல்லை
எனைத்தொன்றும்
வாய்மையின் நல்ல பிற.

யால்]
25

31. வெகுளாமை.

31. வெகுளாமை.

301.

செல்இடத்துக் காப்பான் சினம்காப்பான் ;அல்
காக்கில்என் காவாக்கால் என்?

இடத்

[துக்

**302.** செல்லா இடத்துச் சினம்தீது; செல்இடத்தும்
இல்அதனில் தீய பிற.

**303.** மறத்தல் வெகுளியை யார்மாட்டும்; தீய
பிறத்தல் அதனால் வரும்.

**304.** நகையும் உவகையும் கொல்லும் சினத்தின்

பகையும் உளவோ பிற?

**305.** தன்னைத்தான் காக்கின் சினம்காக்க;
காவாக்கால்
தன்னையே கொல்லும் சினம்.

**306.**

சினம்என்னும் சேர்ந்தாரைக் கொல்லி இனம்
ஏமப் புணையைச் சுடும்.

என்
[னும்

**307.** சினத்தைப் பொருள்என்று கொண்டவன்
கேடு

நிலத்தறைந்தான் கைபிழையா தற்று.

**308.** இணர்எரி தோய்வன்ன இன்னா செயினும்
புணரின் வெகுளாமை நன்று.

**309.** உள்ளிய எல்லாம் உடன்எய்தும்
உள்ளத்தால்
உள்ளான் வெகுளி எனின்.

**310.** இறந்தார் இறந்தார் அனையர்; சினத்தைத்
துறந்தார் துறந்தார் துணை.

## 32. இன்னா செய்யாமை.

**311.** சிறப்பீனும் செல்வம் பெறினும் பிறர்க்கின்னா
செய்யாமை மாசற்றார் கோள்.

**312.** கறுத்தின்னா செய்தவன் கண்ணும்
மறுத்தின்னா
செய்யாமை மாசற்றார் கோள்.

4

313. செய்யாமல் செற்றார்க்கும் இன்னாத செய்தபின்
உய்யா விழுமம் தரும்.

314. இன்னா செய்தாரை ஒறுத்தல் அவர்நாண
நல்நயம் செய்து விடல்.

315. அறிவினான் ஆகுவ துண்டோ பிறிதின்
நோய்

தம்நோய்போல் போற்றாக் கடை.

316.

இன்னா எனத்தான் உணர்ந்தவை துன்னாமை
வேண்டும் பிறன்கண் செயல்.

317. எனைத்தானும் எஞ்ஞான்றும் யார்க்கும்
மனத்தானாம்

மாணாசெய் யாமை தலை.

318. தன்உயிர்க் கின்னாமை தான்அறிவான்
மன்னுயிர்க் கின்னா செயல்?

என்கொலோ

319. பிறர்க்கின்னா முற்பகல் செய்யின்
தமக்கின்னா

பிற்பகல் தாமே வரும்.

320. நோய்எல்லாம் நோய்செய்தார் மேலவாம்; நோய் செய்
நோய்இன்மை வேண்டு பவர்.
[யார்

## 33. கொல்லாமை.

321.

அறவினை யாதெனில் கொல்லாமை; கோறல்
பிறவினை எல்லாம் தரும்.

322. பகுத்துண்டு பல்உயிர் ஓம்புதல் நூலோர்
தொகுத்தவற்றுள் எல்லாம் தலை.

323. ஒன்றாக நல்லது கொல்லாமை; மற்றதன்
பின்சாரப் பொய்யாமை நன்று.

324. நல்லா றெனப்படுவ தியாதெனின் யாதொன்றும்
கொல்லாமை சூழும் நெறி.

325.

நிலைஅஞ்சி நீத்தாருள் எல்லாம் கொலைஅஞ்சிக்
கொல்லாமை சூழ்வான் தலை. பால்]

35. நிலையாமை. 27

326. கொல்லாமை மேற்கொண் டொழுகுவான்
செல்லா துயிர்உண்ணும் கூற்று.

வாழ்நாள்
[மேல்

327. தன்உயிர் நீப்பினும் செய்யற்க தான்பிறி
தின்உயிர் நீக்கும் வினை

328.

நன்றாகும் ஆக்கம் பெரிதெனினும் சான்றோர்க்குக்
கொன்றாகும் ஆக்கம் கடை.

329. கொலைவினையர் ஆகிய மாக்கள் புலைவினையர்
புன்மை தெரிவார் அகத்து.

330. உயிர்உடம்பின் நீக்கியார் என்பர்

சேயிர்உடம்பின்

செல்லாத்தீ வாழ்க்கை யவர்.

## 34 நிலையாமை.

**331.** நில்லாத வற்றை நிலையின என்றுணரும்
புல்லறி வாண்மை கடை.

**332.** கூத்தாட் டவைக்குழாத் தற்றே பெரும்செல்வம்;
போக்கும் அதுவிளிந் தற்று.

**333.** அற்கா இயல்பிற்றுச் செல்வம்; அதுபெற்றால்
அற்குப ஆங்கே செயல்.

**334.** நாள்என ஒன்றுபோல் காட்டி உயிர்ஈரும்
வாள துணர்வார்ப் பெறின்.

**335.** நாச்செற்று விக்குள்மேல் வாராமுன் நல்வினை
மேற்சென்று செய்யப் படும்.

**336.** நெருநல் உளன்ஒருவன் இன்றில்லை என்னும்
பெருமை உடைத்திவ் வுலகு.

**337.** ஒருபொழுதும் வாழ்வ தறியார்; கருதுப
கோடியும் அல்ல பல.

**338.** குடம்பை தனித்தொழியப் புள்பறந் தற்றே

உடம்போ டுயிர்இடை நட்பு.



**339.** உறங்குவது போலும் சாக்கா டுறங்கி
விழிப்பது போலும் பிறப்பு.

**340.** புக்கில் அமைந்தின்று கொல்லோ உடம்பினுள்
துச்சில் இருந்த உயிர்க்கு?

## 35. துறவு.

**341.** யாதனின் யாதனின் நீங்கியான் நோதல்
அதனின் அதனின் இலன்.

**342.** வேண்டின்உண் டாகத் துறக்க துறந்தபின்
ஈண்டியற் பால பல.

**343.** அடல்வேண்டும் ஐந்தன் புலத்தை; விடல்வேண்டும்
வேண்டிய எல்லாம் ஒருங்கு.

**344.** இயல்பாகும் நோன்பிற்கொன் றின்மை ; உடைமை

மயலாகும் மற்றும் பெயர்த்து.

**345.**

மற்றும் தொடர்ப்பா டெவன்கொல்? பிறப்பறுக்கல் உற்றார்க் குடம்பு மிகை.

**346.** யானென தென்னும் செருக்கறுப்பான் வானோர்க்

குயர்ந்த உலகம் புகும்.

**347.** பற்றி விடாஅ இடும்பைகள் பற்றினைப்
பற்றி விடாஅ தவர்க்கு.

**348.** தலைப்பட்டார் தீரத் துறந்தார் ; மயங்கி
வலைப்பட்டார் மற்றை யவர்.

**349.** பற்றற்ற கண்ணே பிறப்பறுக்கும்; மற்று
நிலையாமை காணப் படும்.

**350.** பற்றுக பற்றற்றான் பற்றினை; அப்பற்றைப் பற்றுக பற்று விடற்கு.

பால்]

## 36. மெய்யுணர்தல்

351. பொருள்அல் லவற்றைப் பொருள்என்

றுணரும்

மருளான்ஆம் மாணாப் பிறப்பு.

352. இருள்நீங்கி இன்பம் பயக்கும் மருள்நீங்கி
மாசறு காட்சி யவர்க்கு.

353. ஐயத்தின் நீங்கித் தெளிந்தார்க்கு
வானம் நணிய துடைத்து.

வையகத்தின்

354.

ஐஉணர் வெய்தியக் கண்ணும் பயமின்றே
மெய்யுணர் வில்லா தவர்க்கு.

355.

எப்பொருள் எத்தன்மைத் தாயினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு.

356. கற்றீண்டு மெய்ப்பொருள்
மற்றீண்டு வாரா நெறி.

கண்டார் தலைப்படுவர்

357.

ஓர்த்துள்ளம் உள்ள துணரின் ஒருதலையாப்
பேர்த்துள்ள வேண்டா பிறப்பு.

358. பிறப்பென்னும் பேதைமை நீங்கச்
செம்பொருள் காண்ப தறிவு.

சிறப்பென்னும்

359. சார்புணர்ந்து சார்பு கெடஒழுகின்
மற்றழித்துச்
சார்தரா சார்தரும் நோய்.

360. காமம் வெகுளி மயக்கம் இவைமூன்றன்
நாமம் கெடக்கெடும் நோய்.

## 37. அவா அறுத்தல்.

361. அவாஎன்ப எல்லா உயிர்க்கும்

எஞ்ஞான்றும்

தவாஅப் பிறப்பீனும் வித்து.

362. வேண்டுங்கால் வேண்டும் பிறவாமை; மற்றது

வேண்டாமை வேண்ட வரும்.

363. வேண்டாமை அன்ன விழுச்செல்வம் ஈண்டில்லை;

யாண்டும் அஃதொப்ப தில்.

364. தூஉய்மை என்ப தவாவின்மை; மற்றது
வாஅய்மை வேண்ட வரும்.



365. அற்றவர் என்பார் அவாவற்றார்; மற்றையார்
அற்றாக அற்ற திலர்.

366. அஞ்சுவ தோரும் அறனே; ஒருவனை
வஞ்சிப்ப தோரும் அவா.

367. அவாவினை ஆற்ற அறுப்பின் தவாவினை
தான்வேண்டும் ஆற்றான் வரும்.

368. அவாவில்லார்க் கில்லாகும் துன்பம்; அஃதுண்டேல்

தவாஅது மேன்மேல் வரும்.

369. இன்பம் இடையறா தீண்டும்; அவாஎன்னும்
துன்பத்துள் துன்பம் கெடின்.

370. ஆரா இயற்கை அவாநீப்பின் அந்நிலையே
பேரா இயற்கை தரும்.

## 38. ஊழ்.

371. ஆகூழால் தோன்றும் அசைவின்மை கைப்பொருள்;
போகூழால் தோன்றும் மடி.

372. பேதைப்படுக்கும் இழவூழ்; அறிவகற்றும்
ஆகலூழ் உற்றக் கடை.

373. நுண்ணிய நூல்பல கற்பினும் மற்றுந்தன்
உண்மை அறிவே மிகும்.

374. இருவே றுலகத் தியற்கை; திருவேறு
தெள்ளியர் ஆதலும் வேறு.

375. நல்லவை எல்லாம் தீயவாம்; தீயவும்
நல்லவாம் செல்வம் செயற்கு.

376. பரியினும் ஆகாவாம் பால்அல்ல; உய்த்துச்
சொரியினும் போகா தம.

377. வகுத்தான் வகுத்த வகையல்லால் கோடி

தோகுத்தார்க்கும் துய்த்தல் அரிது.



378. துறப்பார்மன் துப்புர வில்லார் உறல்பால
ஊட்டா கழியும் எனின்.

379. நன்றாங்கால் நல்லவாக் காண்பவர் அன்றாங்கால்
அல்லல் படுவ தேவன்?

380. ஊழின் பெருவலி யாஉள? மற்றொன்று
சூழினும் தான்முந் துறும்.

---

# பொருட்பால்

## 39. இறைமாட்சி.

381. படைகுடி கூழ்அமைச்சு நட்பரண் ஆறும்
உடையான் அரசருள் ஏறு.

382. அஞ்சாமை ஈகை அறிவூக்கம் இந்நான்கும்
எஞ்சாமை வேந்தற் கியல்பு.

383. தூங்காமை கல்வி துணிவுடைமை இம்மூன்றும்
நீக்கா நிலன்ஆள் பவர்க்கு.

884. அறன்இழுக்கா தல்லவை நீக்கி மறன்இழுக்கா
மானம் உடைய தரசு.

385. இயற்றலும் ஈட்டலும் காத்தலும் காத்த
வகுத்தலும் வல்ல தரசு.

386. காட்சிக் கெளியன் கடுஞ்சொல்லன் அல்லனேல்
மீக்கூறும் மன்னன் நிலம்.

387. இன்சொலால் ஈத்தளிக்க வல்லாற்குத் தன்சொலால்
தான்கண் டனைத்திவ் வுலகு.



388. முறைசெய்து காப்பாற்றும் மன்னவன் மக்கட்
கிறைஎன்று வைக்கப் படும்.

389. செவிகைப்பச் சொல்பொறுக்கும் பண்புடை

வேந்தன்

கவிகைக்கீழ்த் தங்கும் உலகு.

**390.** கொடைஅளி செங்கோல் குடிஓம்பல் நான்கும்
உடையான்ஆம் வேந்தர்க் கொளி.

## 40. கல்வி.

**391.** கற்கக் கசடறக் கற்பவை; கற்றபின்
நிற்க அதற்குத் தக.

**362.** எண்ணென்ப ஏனை எழுத்தென்ப இவ்விரண்டும்
கண்என்ப வாழும் உயிர்க்கு.

**393.** கண்ணுடையர் எனபவர் கற்றோர்;
முகத்திரண்டு
புண்ணுடையர் கல்லா தவர்.

**394.** உவப்பத் தலைக்கூடி உள்ளப் பிரிதல்

அனைத்தே புலவர் தொழில்.

**395.** உடையார்முன் இல்லார்போல் ஏக்கற்றும்
கற்றார்:
கடையரே கல்லா தவர்.

**396.** தொட்டனைத் தூறும் மணல்கேணி;
கற்றனைத் தூறும் அறிவு.

மாந்தர்க்குக்

397. யாதானும் நாடாமல் ஊராமால் என்னொருவன்
சாந்துணையும் கல்லாத ஆறு.

398. ஒருமைக்கண் தான்கற்ற கல்வி ஒருவற்
கெழுமையும் ஏமாப் புடைத்து.

399. தாம்இன் புறுவ துலகின் புறக்கண்டு

காமுறுவர் கற்றறிந் தார்.

400. கேடில் விழுச்செல்வம் கல்வி ஒருவற்கு
மாடல்ல மற்றை யவை.

யால்] 41. கல்லாமை.

33

## 41. கல்லாமை.

401. அரங்கின்றி வட்டாடி அற்றே நிரம்பிய
நூலின்றி கோட்டி கொளல்.

402. கல்லாதான் சொல்கா முறுதல் முலையிரண்டும்
இல்லாதாள் பெண்காமுற் றற்று.

403. கல்லா தவரும் நனிநல்லர் கற்றார்முன்
சொல்லா திருக்கப் பெறின்.

404. கல்லாதான் ஒட்பம் கழியநன் றாயினும்

கொள்ளார் அறிவுடை யார்.

405. கல்லா ஒருவன் தகைமை தலைப்பெய்து
சொல்லாடச் சோர்வு படும்.

406. உளர்என்னும் மாத்திரையர் அல்லால்
பயவாக்
களர் அனையர் கல்லா தவர்.

407. நுண்மாண் நுழைபுலம் இல்லான் எழில்நலம்
மண்மாண் புனைபாவை அற்று.

408. நல்லார்கண் பட்ட வறுமையின் இன்னாதே
கல்லார்கண் பட்ட திரு.

409. மேல்பிறந்தார் ஆயினும் கல்லாதார்
கீழ்ப்பிறந்தும்
கற்றார் அனைத்திலர் பாடு.

410. விலங்கொடு மக்கள் அனையர் இலங்குநூல்
கற்றாரோ டேனை யவர்.

## 42. கேள்வி.

411. செல்வத்துள் செல்வம் செவிச்செல்வம்;
அச்செல்வம்
செல்வத்துள் எல்லாம் தலை.

412. செவிக்குண வில்லாத போழ்து சிறிது

வயிற்றுக்கும் ஈயப் படும்.

5



413. செவிஉணவின் கேள்வி உடையார் அவிஉணவின்
ஆன்றாரோ டொப்பர் நிலத்து.

414. கற்றிலன் ஆயினும் கேட்க; அஃதொருவற்
கொற்கத்தின் ஊற்றாம் துணை.

415. இழுக்கல் உடைஉழி ஊற்றுக்கோல் அற்றே
ஒழுக்கம் உடையார்வாய்ச் சொல்.

416. எனைத்தானும் நல்லவை கேட்க; அனைத்தானும்
ஆன்ற பெருமை தரும்.

417. பிழைத்துணர்ந்தும் பேதைமை சொல்லார் இழைத்
தீண்டிய கேள்வி யவர். [துணர்ந்

418. கேட்பினும் கேளாத் தகையவே கேள்வியால்
தோட்கப் படாத செவி.

419 நுணங்கிய கேள்வியர் அல்லார் வணங்கிய
வாயினர் ஆதல் அரிது.

420. செவியில் சுவைஉணரா வாய்உணர்வின் மாக்கள்
அவியினும் வாழினும் என்?

## 43. அறிவுடைமை.

421. அறிவற்றம் காக்கும் கருவி; செறுவார்க்கும்
உள்அழிக்கல் ஆகா அரண்.

422. சென்ற இடத்தால் செலவிடா தீதொரீஇ
நன்றின்பால் உய்ப்ப தறிவு.

423.

எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு.

424. எண்பொருள ஆகச் செலச்சொல்லித் தாண்பிறர்வாய்
நுண்பொருள் காண்ப தறிவு.

425. உலகம் தழீஇய தொட்பம்; மலர்தலும்
கூம்பலும் இல்ல தறிவு.

பால்]

## 44. குற்றங்கடிதல்.

426. எவ்வ துறைவ துலகம் உலகத்தோ
டவ்வ துறைவ தறிவு.

427. அறிவுடையார் ஆவ தறிவார்; அறிவிலார்
அஃதறி கல்லா தவர்.

428. அஞ்சுவ தஞ்சாமை பேதமை; அஞ்சுவ
தஞ்சல் அறிவார் தொழில்.

429. எதிரதாக் காக்கும் அறிவினார்க் கில்லை
அதிர வருவதோர் நோய்.

430. அறிவுடையார் எல்லாம்
உடையார்; அறிவிலார்
என்உடைய ரேனும் இலர்.

## 44. குற்றங்கடிதல்.

431. செருக்கும் சினமும் சிறுமையும் இல்லார்
பெருக்கம் பெருமித நீர்த்து.

432. இவறலும் மாண்பிறந்த மானமும் மாணா
உவகையும் ஏதம் இறைக்கு.

433. தினைத்துணையாம் குற்றம் வரினும் ப
னைத்துணையாக்
கொள்வர் பழிநாணு வார்.

434. குற்றமே காக்க பொருளாகக் குற்றமே

அற்றம் தரூஉம் பகை.

435. வருமுன்னர்க் காவாதான் வாழ்க்கை எரிமுன்னர்

வைத்தூறு போலக் கெடும்.

436. தன்குற்றம் நீக்கிப் பிறர்குற்றம் காண்கிற்பின்

என்குற்றம் ஆகும் இறைக்கு?

437. செயல்பால செய்யா திவறியான் செல்வம்

உயல்பால தன்றிக் கெடும்.



438. பற்றுள்ளம் என்னும் இவறன்மை எற்றுள்ளும்

எண்ணப் படுவதோன் றன்று.

439. வியவற்க எஞ்ஞான்றும் தன்னை; நயவற்க

நன்றி பயவா வினை.

440. காதல காதல் அறியாமை உய்க்கிற்பின்

ஏதில ஏதிலார் நூல்.

## 45. பெரியாரைத் துணைக்கோடல்.

441. அறன்அறிந்து மூத்த அறிவுடையார் கேண்மை
திறன்அறிந்து தேர்ந்து கொளல்.

442. உற்றநோய் நீக்கி உறாஅமை முன்காக்கும்
பெற்றியார்ப் பேணிக் கொளல்.

443. அரியவற்றுள் எல்லாம் அரிதே பெரியாரைப்
பேணித் தமராக் கொளல்.

444. தம்மின் பெரியார் தமரா ஒழுகுதல்
வன்மையுள் எல்லாம் தலை.

445. சூழ்வார்கண் ஆக ஒழுகலான் மன்னவன்
சூழ்வாரைச் சூழ்ந்து கொளல்.

446. தக்கார் இனத்தனாய்த் தான்ஒழுக வல்லானைச்
செற்றார் செயக்கிடந்த தில்.

447. இடிக்கும் துணையாரை ஆள்வாரை யாரே
கெடுக்கும் தகைமை யவர்?

448. இடிப்பாரை இல்லாத ஏமரா மன்னன்
கெடுப்பார் இலானும் கெடும்.

449.

முதல்இலார்க் கூதியம் இல்லை; மதலையாம்
சார்பிலார்க் கில்லை நிலை.

450.

பல்லார் பகைகொளலின் பத்தடுத்த தீமைத்தே பால்]
நல்லார் தொடர்கை விடல்.



## 46. சிற்றினம் சேராமை.

451. சிற்றினம் அஞ்சும் பெருமை; சிறுமைதான்
சுற்றமாய்ச் சூழ்ந்து விடும்.

452. நிலத்தியல்பால் நீர்திரிந் தற்றாகும் மாந்தர்க்
கினத்தியல்ப தாகும் அறிவு.

453. மனத்தான்ஆம் மாந்தர்க் குணர்ச்சி;
இனத்தான்ஆக
இன்னான் எனப்படும் சொல்.

454. மனத்து ளதுபோலக் காட்டி ஒருவற்
கினத்துள தாகும் அறிவு.

455. மனம்தூய்மை செய்வினை தூய்மை இரண்டும்
இனம்தூய்மை தூவா வரும்.

456. மனம்தூயார்க் கெச்சம்நன் றாகும்;
இனம்தூயார்க்
கில்லைநன் றாகா வினை.

457. மனநலம் மன்னுயிர்க் காக்கம்; இனநலம்
எல்லாப் புகழும் தரும்.

458. மனநலம் நன்குடையர் ஆயினும் சான்றோர்க்
கினநலம் ஏமாப் புடைத்து.

459. மனநலத்தின் ஆகும் மறுமை;மற் றஃதும்
இனநலத்தின் ஏமாப் புடைத்து.

460. நல்இனத்தின் ஊங்கும் துணைஇல்லை;

தீஇனத்தின்
அல்லல் படுப்பதுஉம் இல்.

## 47. தெரிந்து செயல்வகை.

461. அழிவதூஉம் ஆவதூஉம் ஆகி வழிபயக்கும்
ஊதியமும் சூழ்ந்து செயல்.

462. தெரிந்த இனத்தோடு தேர்ந்தெண்ணிச் செய்வார்க்
கரும்பொருள் யாதொன்றும் இல்.



463. ஆக்கம் கருதி முதல்இழக்கும் செய்வினை
ஊக்கார் அறிவுடை யார்.

464. தெளிவில் அதனைத் தொடங்கார் இளிவென்னும்
ஏதப்பா டஞ்சு பவர்.

465. வகைஅறச் சூழா தெழுதல் பகைவரைப்
பாத்திப் படுப்பதோர் ஆறு.

466. செய்தக்க அல்ல செயக்கெடும் செய்தக்க
செய்யாமை யானும் கெடும்.

467. எண்ணித் துணிக கருமம்; துணிந்தபின்

எண்ணுவம் என்ப திழுக்கு.

468. ஆற்றின் வருந்தா வருத்தம் பலர்நின்று
போற்றினும் பொத்துப் படும்.

469. நன்றாற்றல் உள்ளும் தவறுண் டவரவர்
பண்பறிந் தாற்றாக் கடை.

470. எள்ளாத எண்ணிச் செயல்வேண்டும்; தம்மோடு
கொள்ளாத கொள்ளா துலகு.

## 48. வலி அறிதல்

471. வினைவலியும் தன்வலியும் மாற்றான் வலியும்
துணைவலியும் தூக்கிச் செயல்.

472. ஒல்வ தறிவ தறிந்ததன் கண்தங்கிச்
செல்வார்க்குச் செல்லாத தில்.

473. உடைத்தம் வலியறியார் ஊக்கத்தின் ஊக்கி
இடைக்கண் முரிந்தார்பலர்.

474. அமைந்தாங் கொழுகான் அளவறியான் தன்னை
வியந்தான் விரைந்து கெடும்.

475. பீலிபெய் சாகாடும் அச்சிறும்; அப்பண்டம்

சால மிகுத்துப் பெயின்.

பால் 39 49. காலம் அறிதல்.

476. நுனிக்கொம்பர் ஏறினார் அஃதிறந் தூக்கின்
உயிர்க்கிறுதி ஆகி விடும்.

477. ஆற்றின் அளவறிந் தீக; அதுபொருள்
போற்றி வழங்கும் நெறி.

478. ஆகா றளவிட்டி தாயினும் கேடில்லை;
போகா றகலாக் கடை.

479. அளவறிந்து வாழாதான் வாழ்க்கை உளபோல
இல்லாகித் தோன்றாக் கெடும்.

480. உளவரை தூக்காத ஒப்புர வாண்மை
வளவரை வல்லைக் கெடும்;

## 49. காலம் அறிதல்.

481. பகல்வெல்லும் கூகையைக் காக்கை;
இகல்வெல்லும்
வேந்தர்க்கு வேண்டும் பொழுது.

482. பருவத்தோ டொட்ட ஒழுகல் திருவினைத்

தீராமை ஆர்க்கும் கயிறு.

483. அருவினை என்ப உளவோ கருவியால்
காலம் அறிந்து செயின்.




484. ஞாலம் கருதினும் கைகூடும் காலம்
கருதி இடத்தால் செயின்.

485. காலம் கருதி இருப்பர் கலங்காது
ஞாலம் கருது பவர்.

486. ஊக்கம் உடையான் ஒடுக்கம் பொருதகர்
தாக்கற்குப் பேரும் தகைத்து.

487. பொள்என ஆங்கே புறம்வேரார்; காலம்பார்த்
துள்வேர்ப்பர் ஒள்ளி யவர்;

488. செறுநரைக் காணில் சுமக்க; இறுவரை
காணில் கிழக்காம் தலை.



[பொருட்

489. எய்தற் கரிய தியைந்தக்கால் அந்நிலையே
செய்தற் கரிய செயல்.

490. கொக்கொக்க கூம்பும் பருவத்து; மற்றதன்
குத்தொக்க சீர்த்த இடத்து.

## 50. இடன் அறிதல்.

491. தொடங்கற்க எவ்வினையும் எள்ளற்க முற்றும்
இடங்கண்ட பின்அல் லது.

492. முரண்சேர்ந்த மொய்ம்பி னவர்க்கும்
அரண்சேர்ந்தாம்
ஆக்கம் பலவும் தரும்.

493. ஆற்றாரும் ஆற்றி அடுப இடன்அறிந்து
போற்றார்கண் போற்றிச் செயின்.

494. எண்ணியார் எண்ணம் இழப்பர் இடன்அறிந்து
துன்னியார் துன்னிச் செயின்.

495. நெடும்புனலுள் வெல்லும் முதலை; அடும்புனலின்
நீங்கின் அதனைப் பிற.

496. கடல்ஓடா கால்வல் நெடுந்தேர்; கடல்ஓடும்
நாவாயும் ஓடா நிலத்து.

497. அஞ்சாமை அல்லால் துணைவேண்டா
எஞ்சாமை
எண்ணி இடத்தால் செயின்.

498. சிறுபடையான் செல்இடம் சேரின்
உறுபடையான்
ஊக்கம் அழிந்து விடும்.

499. சிறைநலனும் சீரும் இலர்எனினும் மாந்தர்
உறைநிலத்தோ டொட்டல் அரிது.

500. கால்ஆழ் களறின் நரிஅடும் கண்அஞ்சா
வேல்ஆள் முகத்த களிறு.

யால்]
41

51. தெரிந்து தெளிதல்.

# 51. தெரிந்து தெளிதல்.

501. அறம்பொருள் இன்பம் உயிர்அச்சம் நான்கின்
திறம்தெரிந்து தேரப் படும்.

502. குடிப்பிறந்து குற்றத்தின் நீங்கி வடுப்பரியும்
நாண்உடையான் கட்டே தெளிவு.

503. அரியகற் றாசற்றார் கண்ணும் தெரியுங்கால்
இன்மை அரிதே வெளிறு.

504. குணம்நாடிக் குற்றமும் நாடி அவற்றுள்
மிகைநாடி மிக்க கொளல்.

505. பெருமைக்கும் ஏனைச் சிறுமைக்கும் தத்தம்
கருமமே கட்டளைக் கல்.

506. அற்றாரைத் தேறுதல் ஓம்புக; மற்றவர்
பற்றிலர்; நாணார் பழி.

507. காதன்மை கந்தா அறிவறியார்த் தேறுதல்

பேதைமை எல்லாம் தரும்.

508. தேரான் பிறனைத் தெளிந்தான் வழிமுறை
தீரா இடும்பை தரும்.

509. தேறற்க யாரையும் தேராது; தேர்ந்தபின்
தேறுக தேறும் பொருள்.

510. தேரான் தெளிவும் தெளிந்தான்கண் ஐயுறவும்
தீரா இடும்பை தரும்.

## 52. தெரிந்து வினையாடல்.

511. நன்மையும் தீமையும் நாடி நலம்புரிந்த
தன்மையான் ஆளப் படும்.

512. வாரி பெருக்கி வளம்படுத் துற்றவை
ஆராய்வான் செய்க வினை.





513. அன்பறிவு தேற்றம் அவாவின்மை இந்நான்கும்
நன்குடையான் கட்டே தெளிவு.

514. எனைவகையால் தேறியக் கண்ணும்

வினைவகையான்

வேறுதும் மாந்தர் பலர்.

515. அறிந்தாற்றிச் செய்கிற்பாற் கல்லால் வினைதான்
சிறந்தான்என் றேவல்பாற் றன்று.

516. செய்வானை நாடி வினைநாடிக் காலத்தோ
டெய்த உணர்ந்து செயல்.

517. இனை இதனுல் இவன்முடிக்கும் என்றுய்ந்
ததனை அவன்கண் விடல். 518.
வினைக்குரிமை நாடிய பின்றை அவனை
அதற்குரியன் ஆகச் செயல்.

519. வினைக்கண் வினைஉடையான் கேண்மைவே
றுக
நினைப்பானை நீங்கும் திரு.

520. நாள்தோறும் நாடுக மன்னன்; வினைசெய்வான்
கோடாமை கோடா துலகு.

## 53. *சுற்றம் தழால்.*

521. பற்றற்ற கண்ணும் பழைமைபா ராட்டுதல்
சுற்றத்தார் கண்ணே உள.

522. விருப்பறுச் சுற்றம் இயைபின் அருப்பறு

ஆக்கம் பலவும் தரும்.

523. அளவளா வில்லாதான் வாழ்க்கை
குளவளாக்
கோடின்றி நீர்நிறைந் தற்று.

524. சுற்றத்தால் சுற்றப் படஒழுகல்
செல்வம்தான்
பெற்றத்தால் பெற்ற பயன்.

525. கொடுத்தலும் இன்சொலும் ஆற்றின்
அடுக்கிய
சுற்றத்தால் சுற்றப் படும்.

பால்]
43

## 54. பொச்சாவாமை.

526.

பெருங்கொடையான் பேணான் வெகுளி அவனின்
மருங்குடையார் மாநிலத் தில்.

527. காக்கை கரவா கரைந்துண்ணும்; ஆக்கமும்
அன்னநீ ரார்க்கே உள.

528. பொதுநோக்கான் வேந்தன் வரிசையா நோக்கின்
அதுநோக்கி வாழ்வார் பலர்.

529. தமராகித் தன்துறந்தார் சுற்றம் அமராமைக்
காரண மின்றி வரும்.

530. உழைப்பிரிந்து காரணத்தின் வந்தானை வேந்தன்
இழைத்திருந் தெண்ணிக் கொளல்.

## 54. பொச்சாவாமை.

531. இறந்த வெகுளியில் தீதே சிறந்த
உவகை மகிழ்ச்சியின் சோர்வு.

532. பொச்சாப்புக் கொல்லும் புகழை; அறிவினை
நிச்ச நிரப்புக்கொன் றாங்கு.

533. பொச்சாப்பார்க் கில்லை புகழ்மை; அதுஉலகத்
தெப்பால்நூ லோர்க்கும் துணிவு.

534. அச்சம் உடையார்க் கரண்இல்லை; ஆங்கில்லை
பொச்சாப் புடையார்க்கு நன்கு.

535. முன்உறக் காவா திழுக்கியான் தன்பிழை
பின்ஊ றிரங்கி விடும்.

536. இழுக்காமை யார்மாட்டும் என்றும்
வழுக்காமை வாயின் அதுஒப்ப தில்.

537. அரியஎன் றாகாத இல்லைபொச் சாவாக்
கருவியால் போற்றிச் செயின்.

538. புகழ்ந்தவை போற்றிச் செயல்வேண்டும்; செய்யா
திகழ்ந்தார்க் கெழுமையும் இல்.



539. இகழ்ச்சியில் கெட்டாரை உள்ளுக தாம்தம்
மகிழ்ச்சியின் மைந்துறும் போது.

540. உள்ளிய தெய்தல் எளிதுமன் மற்றும்தான்
உள்ளிய துள்ளப் பெறின்.

## 55. செங்கோன்மை.

541. ஓர்ந்துகண் ணோடா திறைபுரிந் தியார்மாட்டும்
தேர்ந்துசெய் வஃதே முறை.

542. வான்நோக்கி வாழும் உலகெல்லாம்; மன்னவன்
கோல்நோக்கி வாழும் குடி.

543. அந்தணர் நூற்கும் அறத்திற்கும் ஆதியாய்
நின்றது மன்னவன் கோல்.

544. குடிதழீஇக் கோல்ஓச்சும் மாநில மன்னன்
அடிதழீஇ நிற்கும் உலகு.

545. இயல்புளிக் கோல்ஓச்சும் மன்னவன் நாட்ட
பெயலும் விளையுளும் தொக்கு.

546. வேல்அன்று வென்றி தருவது மன்னவன்
கோல்;அதூஉம் கோடா தெனின்.

547. இறைகாக்கும் வையகம் எல்லாம்; அவனை
முறைகாக்கும் முட்டாச் செயின்.

548. எண்பதத்தான் ஓரா முறைசெய்யா மன்னவன்
தண்பதத்தால் தானே கெடும்.

549. குடிபுறம் காத்தோம்பிக் குற்றம் கடிதல்
வடுஅன்று; வேந்தன் தொழில்.

550. கொலையில் கொடியாரை வேந்தொறுத்தல் பைங்கூழ்
களைகட் டதனொடு நேர்.

பால்]

## 56. கொடுங்கோன்மை.

## 56. கொடுங்கோன்மை.

551. கொலைமேல் கொண்டாரில் கொடிதே
அலைமேல்
டல்லவை செய்தொழுகும் வேந்து.
[கோண்

552. வேலொடு நின்றான் இடுஎன் றதுபோலும்
கோலொடு நின்றான் இரவு.

553. நாள்தோறும் நாடி முறைசெய்யா மன்னவன்
நாள்தோறும் நாடு கெடும்.

554. கூழும் குடியும் ஒருங்கிழக்கும் கோல்கோடிச்
சூழாது செய்யும் அரசு.

555. அல்லல்பட் டாற்றா தழுதகண் ணீர்அன்றே
செல்வத்தைத் தேய்க்கும் படை.

556. மன்னர்க்கு மன்னுதல் செங்கோன்மை;
அஃதின்றேல்
மன்னாவாம் மன்னர்க் கொளி.

557. துளியின்மை ஞாலத்திற் கெற்றற்றே வேந்தன்
அளியின்மை வாழும் உயிர்க்கு.

558. இன்மையின் இன்னா துடைமை
முறைசெய்யா
மன்னவன் கோல்கீழ்ப் படின்.
559. முறைகோடி மன்னவன் செய்யின்
உறைகோடி
ஒல்லாது வானம் பெயல்.
560. ஆபயன் குன்றும் அறுதொழிலோர்
நூல்மறப்பார்
காவலன் காவான் எனின்.

## 57. வெருவந்த செய்யாமை.

561. தக்காங்கு நாடித் தலைச்செல்லா வண்ணத்தால்
ஒத்தாங் கொறுப்பது வேந்து.
562. கடிதோச்சி மெல்ல எறிக நெடிதாக்கம்
நீங்காமை வேண்டு பவர்.



563. வெருவந்த செய்தொழுகும் வெங்கோலன்
ஆயின்

ஒருவந்தம் ஒல்லைக் கெடும்.

564. இறைகடியன் என்றுரைக்கும் இன்னாச்சொல்
வேந்
உறைகடுகி ஒல்லைக் கெடும்.
[தன்

565. அருஞ்செவ்வி இன்னா முகத்தான்
பெருஞ்செல்வம்
பேஎய்கண் டன்ன துடைத்து.

566. கடுஞ்சொல்லன் கண்ணிலன் ஆயின்
நெடுஞ்செல்வம்
நீடின்றி ஆங்கே கெடும்.

567. கடுமொழியும் கைஇகந்த தண்டமும் வேந்தன்
அடுமுரண் தேய்க்கும் அரம்.

568. இனத்தாற்றி எண்ணாத வேந்தன்
சினத்தாற்றிச்
சீறின் சிறுகும் திரு.

569. செருவந்த போழ்தில் சிறைசெய்யா வேந்தன்
வெருவந்து வெய்து கெடும்.

570. கல்லார்ப் பிணிக்கும் கடுங்கோல்: அதுஅல்ல
தில்லை நிலக்குப் பொறை.

# 58. கண்ணோட்டம்.

571.

கண்ணோட்டம் என்னும் கழிபெரும் காரிகை
உண்மையால் உண்டிவ் வுலகு.

572. கண்ணோட்டத் துள்ள துலகியல்; அஃதிலார்
உண்மை நிலக்குப் பொறை.

573. பண்என்னாம் பாடற் கியைபின்றேல்?
கண்என்னாம்
கண்ணோட்டம் இல்லாத கண்?

574. உளபோல் முகத்தெவன் செய்யும்
அளவினால்
கண்ணோட்டம் இல்லாத கண்?

575. கண்ணிற் கணிகலம் கண்ணோட்டம்;
அஃதின்றேல்
புண்என் றுணரப் படும்.

பால்] 59. ஒற்றாடல்.

 576. மண்ணோ டியைந்த மரத்தனையர் கண்ணோ

டியைந்துகண் ணோடா தவர்.

577. கண்ணோட்டம் இல்லவர் கண்ணிலர்;
கண்ணோட்டம் இன்மையும் இல்.

.கண்ணுடை
[யார்

578. கருமம் சிதையாமல் கண்ணோட வல்லார்க்
குரிமை உடைத்திவ் வுலகு.

579.

ஒறுத்தாற்றும் பண்பினார் கண்ணும்கண் ணோடிப்
பொறுத்தாற்றும் பண்பே தலை.

580. பெயக்கண்டு நஞ்சுண் டமைவர் நயத்தக்க
நாகரிகம் வேண்டு பவர்.

## 59. *ஒற்றாடல்.*

581. ஒற்றும் உரைசான்ற நூலும் இவைஇரண்டும்
தெற்றென்க மன்னவன் கண்.

582. எல்லார்க்கும் எல்லாம் நிகழ்பவை

எஞ்ஞான்றும்

வல்லறிதல் வேந்தன் தொழில்.

583. ஒற்றினால் ஒற்றிப் பொருள்தெரியா மன்னவன்
கொற்றம் கொளக்கிடந்த தில்.

584. வினைசெய்வார் தம்சுற்றம் வேண்டாதார் என்றாங்

கனைவரையும் ஆராய்வ தொற்று.

585. கடாஅ உருவொடு கண்ணஞ்சா தியாண்டும்
உகாஅமை வல்லதே ஒற்று.

586. துறந்தார் படிவத்தர் ஆகி இறந்தாராய்ந்
தென்செயினும் சோர்விலது ஒற்று.

587. மறைந்தவை கேட்கவற் றாகி அறிந்தவை
ஐயப்பா டில்லதே ஒற்று.

588. ஒற்றொற்றித் தந்த பொருளையும் மற்றும் ஓர்
ஒற்றினால் ஒற்றிக் கொளல்.



589. ஒற்றொற் றுணராமை ஆள்க; உடன்மூவர்
சொல்தொக்க தேறப் படும்.

590. சிறப்பறிய ஒற்றின்கண் செய்யற்க; செய்யின்

புறப்படுத்தான் ஆகும் மறை.

## 60. ஊக்கமுடைமை.

591. உடையர் எனப்படுவ தூக்கம்; அஃதில்லார்
உடைய துடையரோ மற்று?

592. உள்ளம் உடைமை உடைமை; பொருள்உடைமை
நில்லாது நீங்கி விடும்.

593. ஆக்கம் இழந்தேம்என் றல்லாவார் ஊக்கம்
ஒருவந்தம் கைத்துடை யார்.

594. ஆக்கம் அதர்வினாய்ச் செல்லும் அசைவிலா
ஊக்கம் உடையான் உழை.

595. வெள்ளத் தனைய மலர்நீட்டம்; மாந்தர்தம்
உள்ளத் தனைய துயர்வு.

596. உள்ளுவ தெல்லாம் உயர்வுள்ளல் ; மற்றது
தள்ளினும் தள்ளாமை நீர்த்து.

597. சிதைவிடத் தொல்கார் உரவோர்; புதைஅம்பில்
பட்டுப்பா டூன்றும் களிறு.

598. உள்ளம் இலாதவர் எய்தார் உலகத்து
வள்ளியம் என்னும் செருக்கு.

599. பரியது கூர்ங்கோட்ட தாயினும் யானை
வெரூஉம் புலிதாக் குறின்.

600. உரம்ஒருவற் குள்ள வெறுக்கை; அஃதில்லார்
மரம் ;மக்கள் ஆதலே வேறு.

பால்]
49

61. *மடியின்மை.*

## 61. மடியின்மை.

601. குடிஎன்னும் குன்றா விளக்கம் மடிஎன்னும்
மாசூர மாய்ந்து கெடும்.

602. மடியை மடியா ஒழுகல் குடியைக்
குடியாக வேண்டு பவர்.

603. மடிமடிக் கொண்டொழுகும் பேதை பிறந்த
குடிமடியும் தன்னினும் முந்து.

604. குடிமடிந்து குற்றம் பெருகும் மடிமடிந்து
மாண்ட உஞற்றி லவர்க்கு.

605. நெடுநீர் மறவி மடிதுயில் நான்கும்
கெடுநீரார் காமக் கலன்.

606. படிஉடையார் பற்றமைந்தக் கண்ணும்

மடிஉடையார்

மாண்பயன் எய்தல் அரிது.

607. இடிபுரிந் தெள்ளும்சொல் கேட்பர் மடிபுரிந்து
மாண்ட உஞற்றி லவர்.

608. மடிமை குடிமைக்கண் தங்கின்தன் ஒன்னார்க்
கடிமை புகுத்தி விடும்.

609. குடிஆண்மை உள்வந்த குற்றம் ஒருவன்
மடிஆண்மை மாற்றக் கெடும்.

610. மடியிலா மன்னவன் எய்தும் படிஅளந்தான்
தாஅய தெல்லாம் ஒருங்கு.

## 62 ஆள்வினையுடைமை.

611. அருமை உடைத்தென் றசாவாமை வேண்டும்;

பெருமை முயற்சி தரும்.

612. வினைக்கண் வினைகெடல் ஓம்பல்;
வினைக்குறை

தீர்ந்தாரின் தீர்ந்தன் றுலகு.

613. தாளாண்மை என்னும் தகைமைக்கண்

தங்கிற்றே

• வேளாண்மை என்னும் செருக்கு.



**614.** தாளாண்மை இல்லாதான் வேளாண்மை பேடிகை

வாளாண்மை போலக் கெடும்.

**615.** இன்பம் விழையான் வினைவிழைவான் தன்கேளிர்

துன்பம் துடைத்தூன்றும் தூண்.

**616.** முயற்சி திருவினை ஆக்கும்; முயற்றின்மை
இன்மை புகுத்தி விடும்.

**617.** மடிஉளாள் மாமுகடி என்ப; மடியிலான்
தாள்உளாள் தாமரையி னாள்.

**618.** பொறிஇன்மை யார்க்கும் பழியன் றறிவறிந்
தாள்வினை இன்மை பழி.

**619.** தெய்வத்தான் ஆகா தெனினும் முயற்சிதன்
மெய்வருந்தக் கூலி தரும்.

**620.** ஊழையும் உப்பக்கம் காண்பர்

உலேவின்றித்

தாழா துஞற்று பவர்.

## 63. இடுக்கண் அழியாமை.

621. இடுக்கண் வருங்கால் நகுக; அதனை
அடுத்தூர்வ தஃதொப்ப தில்.

622. வெள்ளத் தனைய இடும்பை அறிவுடையான்
உள்ளத்தின் உள்ளக் கெடும்.

623. இடும்பைக் கிடும்பை படுப்பர் இடும்பைக்
கிடும்பை படாஅ தவர்.

624. மடுத்தவாய் எல்லாம் பகடன்னான் உற்ற
இடுக்கண் இடர்ப்பா டுடைத்து.

625. அடுக்கி வரினும் அழிவிலான் உற்ற
இடுக்கண் இடுக்கண் படும்.

626.

அற்றேமென் றல்லல் படுபவோ பெற்றேமென்
றோம்புதல் தேற்றா தவர்.

---

பால்]

## 64. அமைச்சு.

51

627. இலக்கம் உடம்பிடும்பைக் கென்று
கலக்கத்தைக்
கையாறுக் கொள்ளாதாம் மேல்.
628.

இன்பம் விழையான் இடும்பை இயல்பென்பான்
துன்பம் உறுதல் இலன்.
629. இன்பத்துள் இன்பம் விழையாதான்
துன்பத்துள்
துன்பம் உறுதல் இலன்.
630. இன்னுமை இன்பம் எனக்கொளின்
ஆகும்தன்
ஒன்னார் விழையும் சிறப்பு.

## 64. *அமைச்சு.*

631. கருவியும் காலமும் செய்கையும் செய்யும்
அருவினையும் மாண்ட தமைச்சு.
632. வன்கண் குடிகாத்தல் கற்றறிதல் ஆள்வினையோ
டைந்துடன் மாண்ட தமைச்சு.
633. பிரித்தலும் பேணிக் கொளலும் பிரிந்தார்ப்

பொருத்தலும் வல்ல தமைச்சு.

634. தெரிதலும் தேர்ந்து செயலும் ஒருதலையாச்
சொல்லலும் வல்ல தமைச்சு.

635. அறன்அறிந் தான்றமைந்த சொல்லான்எஞ் ஞான்றும்
திறன்அறிந்தான் தேர்ச்சித் துணை.

636. மதிநுட்பம் நூலோ டுடையார்க் கதிநுட்பம்
யாஉள முன்நிற் பவை?

637. செயற்கை அறிந்தக் கடைத்தும் உலகத்

தியற்கை அறிந்து செயல்.

638. அறிகொன் றறியான் எனினும் உறுதி
உழைஇருந்தான் கூறல் கடன்.

639. பழுதெண்ணும் மந்திரியின் பக்கத்துள் தெவ்வோர்
எழுபது கோடி உறும்.



640. முறைப்படச் சூழ்ந்தும் முடிவிலவே செய்வார்
திறப்பா டிலாஅ தவர்.

## 65. சொல்வன்மை.

**641.** நாநலம் என்னும் நலன் உடைமை; அந்நலம்
யாநலத் துள்ளதூஉம் அன்று.

**642.** ஆக்கமும் கேடும் அதனால் வருதலால்
காத்தோம்பல் சொல்லின்கண் சோர்வு.

**643.** கேட்டார்ப் பிணிக்கும் தகையவாய்க் கேளாரும்
வேட்ப மொழிவதாம் சொல்.

**644.** திறன்அறிந்து சொல்லுக சொல்லை; அறனும்
பொருளும் அதனின்ஊங் கில்.

**645.** சொல்லுக சொல்லைப் பிறிதோர்சொல் அச்சொல்லை
வெல்லும்சொல் இன்மை அறிந்து.

**646.** வேட்பத்தாம் சொல்லிப் பிறர்சொல் பயன்கோடல்
மாட்சியின் மாசற்றார் கோள்.

**647.** சொலல்வல்லன் சோர்விலன் அஞ்சான் அவனை
இகல்வெல்லல் யார்க்கும் அரிது.

648.

விரைந்து தொழில்கேட்கும் ஞாலம் நிரந்தினிது
சொல்லுதல் வல்லார்ப் பெறின்.

649. பலசொல்லக் காமுறுவர் மன்றமா சற்ற
சிலசொல்லல் தேற்று தவர்.

650. இணர்ஊழ்த்தும் நாறா மலர்அனையர் கற்ற
துணர விரித்துரையா தார்.

## 66. வினைத்தூய்மை

651. துணைநலம் ஆக்கம் தருஉம்; வினைநலம்
வேண்டிய எல்லாம் தரும்.

பால்]
53

## 67. வினைத்திட்பம்.

652. என்றும் ஒருவுதல் வேண்டும் புகழொடு
நன்றி பயவா வினை.

653.

ஓஒதல் வேண்டும் ஒளிமாழ்கும் செய்வினை
ஆஅதும் என்னு மவர்.

654. இடுக்கண் படினும் இளிவந்த செய்யார்
நடுக்கற்ற காட்சி யவர்.

655. எற்றென் றிரங்குவ செய்யற்க; செய்வானேல்,
மற்றன்ன செய்யாமை நன்று.

656. ஈன்றாள் பசிகாண்பான் ஆயினும் செய்யற்க
சான்றோர் பழிக்கும் வினை.

657. பழிமலைந் தெய்திய ஆக்கத்தின் சான்றோர்
கழிநல் குரவே தலை.

658. கடிந்த கடிந்தொரார் செய்தார்க் கவைதாம்
முடிந்தாலும் பீழை தரும்.

659. அழக்கொண்ட எல்லாம் அழப்போம்; இழப்பினும்
பிற்பயக்கும் நற்பா லவை.

660. சலத்தால் பொருள்செய்தே மார்த்தல் பசுமண்
கலத்துள்நீர் பெய்திரீஇ அற்று.

## 67. *வினைத்திட்பம்.*

661. வினைத்திட்பம் என்ப தொருவன் மனத்திட்பம்;
மற்றைய எல்லாம் பிற.

662. ஊறொரால் உற்றபின் ஒல்காமை
இவ்விரண்டின்

ஆறென்பர் ஆய்ந்தவர் கோள்.

663. கடைக்கோட்கச் செய்தக்க தாண்மை;
இடைக்கோட்

எற்ரு விழுமம் தரும்.

[கின் . 664. சொல்லுதல் யார்க்கும் எளிய; அரியவாம்
சொல்லிய வண்ணம் செயல்.



665. வீறெய்தி மாண்டார் வினைத்திட்பம்
வேந்தன்கண்

ஊறெய்தி உள்ளப்படும்.

666. எண்ணிய எண்ணியாங் கெய்துப எண்ணியார்
திண்ணியர் ஆகப் பெறின்.

667. உருவுகண் டெள்ளாமை வேண்டும்;
உருள்பெருந்

கச்சாணி அன்னார் உடைத்து.

[தேர்க்

668. கலங்காது கண்ட வினைக்கண் துளங்காது
தூக்கம் கடிந்து செயல்.

669. துன்பம் உறவரினும் செய்க துணிவாற்றி
இன்பம் பயக்கும் வினை.

670.

எனைத்திட்பம் எய்தியக் கண்ணும் வினைட்பம்
வேண்டாரை வேண்டா துலகு.

## 68. வினை செயல் வகை.

671. சூழ்ச்சி முடிவு துணிவெய்தல்; அத்துணிவு
தாழ்ச்சியுள் தங்குதல் தீது.

672. தூங்குக தூங்கிச் செயல்பால; தூங்கற்க
தூங்காது செய்யும் வினை.

673. ஒல்லும்வாய் எல்லாம் வினைநன்றே;
ஒல்லாக்கால்
செல்லும்வாய் நோக்கிச் செயல்.

674. வினைபகை என்றிரண்டின் எச்சம்

நினையுங்கால்

தீஎச்சம் போலத் தெறும்.

**675.** பொருள்கருவி காலம் வினைஇடனொ
டைந்தும்

இருள்தீர எண்ணிச் செயல்.

**676.** முடிவும் இடையூறும் முற்றியாங் கெய்தும்
படுபயனும் பார்த்துச் செயல்.

**677.** செய்வினை செய்வான் செயல்முறை
அவ்வினை

உள்அறிவான் உள்ளம் கொளல்.

யால்

## 69. தூது.

55

**678.** வினையால் வினைஆக்கிக் கோடல்;
நனைகவுள்

யானையால் யானையாத் தற்று.

**679.** நட்டார்க்கு நல்ல செயலின் விரைந்ததே.
ஒட்டாரை ஒட்டிக் கொளல்.

680. உறைசிறியார் உள்நடுங்கல் அஞ்சிக் குறைபெறின்

கொள்வார் பெரியார்ப் பணிந்து.

## 69. தூது.

681. அன்புடைமை ஆன்ற குடிப்பிறத்தல் வேந்தவாம்

பண்புடைமை தூதுரைப்பான் பண்பு.

682. அன்பறி வாராய்ந்த சொல்வன்மை தூதுரைப்பார்க்

கின்றி அமையாத மூன்று.

683. நூலாருள் நூல்வல்லன் ஆகுதல் வேலாருள்
வென்றி வினைஉரைப்பான் பண்பு.

684. அறிவுரு வாராய்ந்த கல்விஇம் மூன்றன்
செறிவுடையான் செல்க வினைக்கு.

685. தொகச்சொல்லித் தூவாத நீக்கி நகச்சொல்லி

நன்றி பயப்பதாம் தூது.

686. கற்றுக்கண் ணஞ்சான் செலச்சொல்லிக்

காலத்தால்

தக்க தறிவதாம் தூது.

687. கடன்அறிந்து காலம் கருதி இடன்அறிந்
தெண்ணி உரைப்பான் தலை.

688. தூய்மை துணைமை துணிவுடைமை
வாய்மை வழிஉரைப்பான் பண்பு.

இம்மூன்றின்

689. விடுமாற்றம் வேந்தர்க் குரைப்பான்
வடுமாற்றம்

வாய்சோரா வன்க ணவன்.

690. இறுதி பயப்பினும் எஞ்சா திறைவற்

குறுதி பயப்பதாம் தூது.

# 70. மன்னரைச் சேர்ந்தொழுகல்.

691. அகலா தணுகாது தீக்காய்வார் போல்க
இகல்வேந்தர்ச் சேர்ந்தொழுகு வார்.

692. மன்னர் விழைப விழையாமை மன்னரால்
மன்னிய ஆக்கம் தரும். 693.

போற்றின் அரியவை போற்றல்; கடுத்தபின்
தேற்றுதல் யார்க்கும் அரிது.

694. செவிச்சொல்லும் சேர்ந்த நகையும்
அவித்தொழுகல்

ஆன்ற பெரியார் அகத்து.

695. எப்பொருளும் ஓரார் தொடரார்மற் றப்பொருளை
விட்டக்கால் கேட்க மறை.

696. குறிப்பறிந்து காலம் கருதி வெறுப்பில
வேண்டுப வேட்பச் சொலல்.

697. வேட்பன சொல்லி வினைஇல எஞ்ஞான்றும்
கேட்பினும் சொல்லா விடல்.

698. இளையர் இனமுறையர் என்றிகழார் நின்ற
ஒளியோ டொழுகப் படும்.

699. கொளப்பட்டேம் என்றெண்ணிக் கொள்ளாத
செய்

துளக்கற்ற காட்சி யவர்.

[யார்

700. பழையம் எனக்கருதிப் பண்பல்ல செய்யும்
கெழுதகைமை கேடு தரும்.

## 71. குறிப்பறிதல்.

701. கூறாமை நோக்கிக் குறிப்பறிவான் எஞ்ஞான்றும்
மாறாநீர் வையக் கணி.

702. ஐயப் படாஅ தகத்த துணர்வானைத்
தெய்வத்தோ டொப்பக் கொளல்.

பால்]
57

## 72. அவை அறிதல்.

703. குறிப்பிற் குறிப்புணர் வாரை உறுப்பினுள்
யாது கொடுத்தும் கொளல்.

704. குறித்தது கூறாமைக் கொள்வாரோ டேனை
உறுப்போர் அனையரால் வேறு.

**705.** குறிப்பில் குறிப்புணரா வாயின் உறுப்பினுள்
என்ன பயத்தவோ கண்?

**706.** அடுத்தது காட்டும் பளிங்குபோல் நெஞ்சம்
கடுத்தது காட்டும் முகம்.

**707.** முகத்தின் முதுக்குறைந்த
துண்டோ? உவப்பினும்
காயினும் தான்முந் துறும்.

**708.** முகம்நோக்கி நிற்க அமையும் அகம்நோக்கி
உற்ற துணர்வார்ப் பெறின்.

**709.** பகைமையும் கேண்மையும் கண்ணுரைக்கும்
கண்
வகைமை உணர்வார்ப் பெறின்.

[ணின்

**710.**
நுண்ணியம் என்பார் அளக்கும்கோல் காணுங்கால்
கண்அல்ல தில்லை பிற.

## 72. அவை அறிதல்.

**711.** அவைஅறிந் தாராய்ந்து சொல்லுக
சொல்லின்
நடைதெரிந்த நன்மை யவர்.

**712.** இடைதெரிந்து நன்குணர்ந்து சொல்லுக

சொல்லின்

நடைதெரிந்த நன்மை யவர்.

713. அவைஅறியார் சொல்லல்மேல் கொள்பவர் சொல்லின்

வகைஅறியார்; வல்லதூஉம் இல்.

714. ஒளியார்முன் ஒள்ளியர் ஆதல்; வெளியார்முன்

வான்சுதை வண்ணம் கொளல்.

715. நன்றென்ற வற்றுள்ளும் நன்றே முதுவருள்
முந்து கிளவாச் செறிவு.

8



716. ஆற்றின் நிலைதளர்ந் தற்றே வியன்புலம்
ஏற்றுணர்வார் முன்னர் இழுக்கு.

717. கற்றறிந்தார் கல்வி விளங்கும் கசடறச்
சொல்தெரிதல் வல்லார் அகத்து.

718. உணர்வ துடையார்முன் சொல்லல் வளர்வதன்
பாத்தியுள் நீர்சொரிந் தற்று.

719. புல்அவையுள் பொச்சாந்தும் சொல்லற்க

நன்கு செலச்சொல்லு வார்.

720. அங்கணத்துள் உக்க அமிழ்தற்றால் தம்கணத்தர்
அல்லார்முன் கோட்டி கொளல்.

## 73. அவை அஞ்சாமை.

721. வகைஅறிந்து வல்லவை வாய்சோரார் சொல்லின்
தொகைஅறிந்த தூய்மை யவர்.

722. கற்றாருள் கற்றார் எனப்படுவர் கற்றார்முன்
கற்ற செலச்சொல்லு வார்.

723. பகைஅகத்துச் சாவார் எளியர்; அரியர்
அவைஅகத் தஞ்சா தவர்.

724. கற்றார்முன் கற்ற செலச்சொல்லித் தாங்கற்ற
மிக்காருள் மிக்க கொளல்.

725. ஆற்றின் அளவறிந்து கற்க அவைஅஞ்சா
மாற்றம் கொடுத்தல் பொருட்டு.

726. வாளொடென் வன்கண்ணர் அல்லார்க்கு? நூலொடென்
நுண்அவை அஞ்சு பவர்க்கு?

727. பகைஅகத்துப் பேடிகை ஒள்வாள் அவைஅகத்
அஞ்சும் அவன்கற்ற நூல்.

728. பல்லவை கற்றும் பயம்இலரே நல்அவையுள்
நன்கு செலச்சொல்லா தார்.

பால்] 74. நாடு.
59

729. கல்லா தவரின் கடைஎன்ப கற்றறிந்தும்
நல்லார் அவைஅஞ்சு வார்.

730. உளர்எனினும் இல்லாரோ டொப்பர் களன்அஞ்சிக்
கற்ற செலச்சொல்லா தார்.

# 74. நாடு.

731. தள்ளா விளையுளும் தக்காரும் தாழ்விலாச்
செல்வரும் சேர்வது நாடு.

732. பெரும்பொருளால் பெட்டக்க தாகி அருங்கேட்டால்
ஆற்ற விளைவது நாடு.

733. பொறைஒருங்கு மேல்வருங்கால் தாங்கி இறைவற்

கிறைஒருங்கு நேர்வது நாடு.

734. உறுபசியும் ஓவாப் பிணியும் செறுபகையும்
சேரா தியல்வது நாடு.

735. பல்குழுவும் பாழ்செய்யும் உட்பகையும் வேந்தலைக்கும்

கொல்குறும்பும் இல்லது நாடு.

736. கேடறியாக் கெட்ட இடத்தும் வளம்குன்றா
நாடென்ப நாட்டின் தலை.

737. இருபுனலும் வாய்ந்த மலையும் வருபுனலும்
வல்லரணும் நாட்டிற் குறுப்பு.

738. பிணிஇன்மை செல்வம் விளைவின்பம் ஏமம்
அணிஎன்ப நாட்டிற்கிவ் வைந்து.

739. நாடென்ப நாடா வளத்தன; நாடல்ல
நாட வளம்தரும் நாடு.

740. ஆங்கமை வெய்தியக் கண்ணும் பயம்இன்றே
வேந்தமை வில்லாத நாடு.

## 75. அரண்.

741. ஆற்று பவர்க்கும் அரண்பொருள்; அஞ்சித்தன்
போற்று பவர்க்கும் பொருள்.

742. மணிநீரும் மண்ணும் மலையும் மணிநிழல்
காடும் உடைய தரண்.

743. உயர்வகலம் திண்மை அருமைஇந் நான்கின்
அமைவரண் என்றுரைக்கும் நூல்.

744. சிறுகாப்பின் பேரிடத்த தாகி உறுபகை
ஊக்கம் அழிப்ப தரண்.

745. கொளற்கரிதாய்க் கொண்டகூழ்த் தாகி அகத்தார்
நிலைக்கெளிதா நீர தரண்.

746. எல்லாப் பொருளும் உடைத்தாய் இடத்துதவும்
நல்ஆள் உடைய தரண்.

747. முற்றியும் முற்று தெறிந்தும் அறைப்படுத்தும்
பற்றற் கரிய தரண்.

748. முற்றாற்றி முற்றி யவரையும் பற்றாற்றிப்
பற்றியார் வெல்வ தரண்.

749. முனைமுகத்து மாற்றலர் சாய வினைமுகத்து
வீறெய்தி மாண்ட தரண்.

- 750. எனைமாட்சித் தாகியக் கண்ணும்
வினைமாட்சி

இல்லார்கண் இல்ல தரண்.

## 76. பொருள் செயல் வகை.

751. பொருள்அல் லவரைப் பொருளாகச் செய்யும்
பொருள்அல்ல தில்லை பொருள்.

752. இல்லாரை எல்லாரும் எள்ளுவர் ;
எல்லாரும் செய்வர் சிறப்பு.

செல்வரை

பால்]

## 77. படைமாட்சி.

61

753. பொருள்என்னும் பொய்யா விளக்கம்
இருள்அறுக்கும்

எண்ணிய தேயத்துச் சென்று.

754. அறன்ஈனும் இன்பமும் ஈனும் திறன்அறிந்து
தீதின்றி வந்த பொருள்.

755. அருளொடும் அன்பொடும் வாராப்
பொருள்ஆக்கம்

புல்லார் புரள விடல்.

756. உறுபொருளும் உல்கு பொருளும்தன் ஒன்னார்த்

தெறுபொருளும் வேந்தன் பொருள்.

757. அருள்என்னும் அன்பீன் குழவி பொருள்என்னும்

செல்வச் செவிலியால் உண்டு.

758. குன்றேறி யானைப்போர்கண்டற்றால் தன்கைத்தொன்

றுண்டாகச் செய்வான் வினை.

759. செய்க பொருளைச் செறுநர் செருக்கறுக்கும்

எஃகதனிற் கூரிய தில்.

760. ஒண்பொருள் காழ்ப்ப இயற்றியார்க் கெண்பொருள்

ஏனை இரண்டும் ஒருங்கு.

## 77. படைமாட்சி.

761. உறுப்பமைந் தூறஞ்சா வெல்படை வேந்தன்

வெறுக்கையுள் எல்லாம் தலை.

762. உலைவிடத் தூறஞ்சா வன்கண் தொலைவிடத்துத்
தொல்படைக் கல்லால் அரிது.

763. ஒலித்தக்கால் என்னும் உவரி எலிப்பகை
நாகம் உயிர்ப்பக் கெடும்.

764. அழிவின் றறைபோகா தாகி வழிவந்த
வன்கண் ணதுவே படை.

765. கூற்றுடன்று மேல்வரினும் கூடி எதிர்நிற்கும்
ஆற்ற லதுவே படை.



766. மறம்மானம் மாண்ட வழிச்செலவு தேற்றம்
எனநான்கே ஏமம் படைக்கு.

767. தார்தாங்கிச் செல்வது தானை தலைவந்த
போர்தாங்கும் தன்மை அறிந்து.

768. அடல்தகையும் ஆற்றலும் இல்எனினும் தானை
படைத்தகையால் பாடு பெறும்.

769. சிறுமையும் செல்லாத் துனியும் வறுமையும்
இல்லாயின் வெல்லும் படை.

770. நிலைமக்கள் சால உடைத்தெனினும் தானை
தலைமக்கள் இல்வழி இல்.

## 78. படைச்செருக்கு.

771. என்ஐமுன் நில்லன்மின் தெவ்விர்! பலர்என்ஐ
முன்நின்று கல்நின்ற வர்.

772. கானம் முயல்எய்த அம்பினில் யானை
பிழைத்தவேல் ஏந்தல் இனிது.

773. பேர்ஆண்மை என்ப தறுகண்ஒன் றுற்றக்கால்
ஊர்ஆண்மை மற்றதன் எஃகு.

774. கைவேல் களிற்றொடு போக்கி வருபவன்
மெய்வேல் பறியா நகும். 775.

விழித்தகண் வேல்கொண் டெறிய அழித்திமைப்பின்
ஓட்டன்றோ வன்கண் ணவர்க்கு.

776. விழுப்புண் படாதநாள் எல்லாம் வழுக்கினுள்
வைக்கும்தன் நாளை எடுத்து.

777. சுழலும் இசைவேண்டி வேண்டா உயிரார்
கழல்யாப்புக் காரிகை நீர்த்து.

778. உறின்உயிர் அஞ்சா மறவர் இறைவன்

செறினும்சீர் குன்றல் இலர்.



779. இழைத்த திகவாமைச் சாவாரை யாரே
பிழைத்த தொறுக்கிற் பவர்?

780. புரந்தார்கண் நீர்மல்கச் சாகிற்பின் சாக்கா
டிரந்துகோள் தக்க துடைத்து.

## 79. நட்பு.

781. செயற்கரிய யாஉள நட்பின்? அதுபோல்
வினைக்கரிய யாஉள காப்பு?

782. நிறைநீர நீரவர் கேண்மை பிறைமதிப்
பின்னீர பேதையார் நட்பு.

783. நவில்தொறும் நூல்நயம் போலும் பயில்தொறும்
பண்புடை யாளர் தொடர்பு.

784. நகுதல் பொருட்டன்று நட்டல்; மிகுதிக்கண்
மேற்சென் றிடித்தல் பொருட்டு.

785. புணர்ச்சி பழகுதல் வேண்டா உணர்ச்சிதான்
நட்பாம் கிழமை தரும்.

786. முகம்நக நட்பது நட்பன்று; நெஞ்சத்
தகம்நக நட்பது நட்பு.

787. அழிவின் அவைநீக்கி ஆறுய்த் தழிவின்கண்
அல்லல் உழப்பதாம் நட்பு.

788. உடுக்கை இழந்தவன் கைபோல ஆங்கே
இடுக்கண் களைவதாம் நட்பு.

789. நட்பிற்கு வீற்றிருக்கை யாதெனில் கொட்பின்றி
ஒல்லும்வாய் ஊன்றும் நிலை.

790. இனையர் இவர்எமக் கின்னம்யாம் என்று
புனையினும் புல்லென்னும் நட்பு.



## 80. நட்பாராய்தல்.

791. நாடாது நட்டலில் கேடில்லை; நட்டபின்
வீடில்லை நட்பாள் பவர்க்கு.

792. ஆய்ந்தாய்ந்து கொள்ளாதான் கேண்மை கடைமுறை
தான்சாம் துயரம் தரும்.

793. குணனும் குடிமையும் குற்றமும் குன்றா
இனனும் அறிந்தியாக்க நட்பு.

794. குடிப்பிறந்து தன்கண் பழிநாணு வானைக்
கொடுத்தும் கொளல்வேண்டும் நட்பு.

795. அழச்சொல்லி அல்லது இடித்து வழக்கறிய
வல்லார்நட் பாய்ந்து கொளல்.

796. கேட்டினும் உண்டோர் உறுதி கிளைஞரை
நீட்டி அளப்பதோர் கோல்.

797. ஊதியம் என்ப தொருவற்குப் பேதையார்
கேண்மை ஒரீஇ விடல்.

798. உள்ளற்க உள்ளம் சிறுகுவ; கொள்ளற்க
அல்லல்கண் ஆற்றறுப்பார் நட்பு.

799. கெடுங்காலைக் கைவிடுவார் கேண்மை அடுங்காலை
உள்ளினும் உள்ளம் சுடும்.

800. மருவுக மாசற்றார் கேண்மை;ஒன் றீத்தும்
ஒருவுக ஒப்பிலார் நட்பு.

## 81. பழைமை.

801. பழைமை எனப்படுவ தியாதெனின் யாதும்
கிழமையைக் கீழ்ந்திடா நட்பு.

802. நட்பிற் குறுப்புக் கெழுதகைமை; மற்றதற்
குப்பாதல் சான்றோர் கடன்.

பால்] 82. தீ நட்பு.

**65**

803. பழகிய நட்பெவன் செய்யும் கெழுதகைமை
செய்தாங் கமையாக் கடை?

804. விழைதகையான் வேண்டி இருப்பார்
கெழுதகையால்
கேளாது நட்டார் செயின்.

805.

பேதைமை ஒன்றோ பெருங்கிழமை என்றுணர்க
நோதக்க நட்டார் செயின்.

806. எல்லைக்கண் நின்றார் துறவார்
தொலைவிடத்தும்
தொல்லைக்கண் நின்றார் தொடர்பு.

807. அறிவந்த செய்யினும் அன்பறார் அன்பின்

வழிவந்த கேண்மை யவர்.

808. கேள்இழுக்கம் கேளாக் கெழுதகைமை
வல்லார்க்கு

நாள்இழுக்கம் நட்டார் செயின்.

809. கெடாஅ வழிவந்த
கேண்மையார் கேண்மை

விடாஅர் விழையும் உலகு.

810. விழையார் விழையப் படுப பழையார்கண்
பண்பில் தலைப்பிரியா தார்.

## 82. தீ நட்பு.

811. பருகுவார் போலினும் பண்பிலார்
கேண்மை

பெருகலிற் குன்றல் இனிது.

812. உறின்நட் டறின்ஒருஉம் ஒப்பிலார்
கேண்மை

பெறினும் இழப்பினும் என்?

813. உறுவது சீர்தூக்கும் நட்பும் பெறுவது

கோள்வாரும் கள்வரும் நேர்.

814. அமர்அகத் தாற்றறுக்கும் கல்லாமா அன்னார்

தமரில் தனிமை தலை.

815. செய்தேமம் சாராச் சிறியவர் புன்கேண்மை

எய்தலின் எய்தாமை நன்று.

9



816. பேதை பெருங்கெழீஇ நட்பின் அறிவுடையார்

ஏதின்மை கோடி உறும்.

817. நகைவகையர் ஆகிய நட்பின் பகைவரால்
பத்தடுத்த கோடி உறும்.

818. ஒல்லும் கருமமும் உடற்று பவர்கேண்மை
சொல்லாடார் சோர விடல்.

819. கனவிலும் இன்னாது மன்னோ வினைவேறு

சொல்வேறு பட்டார் தொடர்பு.

820. எனைத்தும் குறுகுதல் ஓம்பல் மனைக்கெழீஇ
மன்றில் பழிப்பார் தொடர்பு.

## 83. கூடா நட்பு.

821. சீர்இடம் காணின் எறிதற்குப் பட்டடை
நேரா நிரந்தவர் நட்பு.

822. இனம்போன்றினமல்லார் கேண்மை மகளிர்
மனம்போல வேறு படும்.

823. பலநல்ல கற்றக் கடைத்தும் மனம்நல்லர்
ஆகுதல் மாணார்க் கரிது.

824. முகத்தின் இனிய நகாஅ அகத்தின்னா
வஞ்சரை அஞ்சப் படும்.

825.
மனத்தின் அமையா தவரை எனைத்தொன்றும்
சொல்லினால் தேறல்பாற் றன்று.

826. நட்டார்போல் நல்லவை சொல்லினும்
ஒட்டார்சொல்

ஒல்லை உணரப் படும்.

827. சொல்வணக்கம் ஒன்னார்கண் கொள்ளற்க
வில்வணக்

தீங்கு குறித்தமை யான்.

[கம்

**828.** தொழுதகை உள்ளும் படையொடுங்கும் ஒன்னார்;
அழுதகண் ணீரும் அனைத்து.



**829.** மிகச்செய்து தம்எள்ளு வாரை நகச்செய்து
நட்பினுள் சாப்புல்லற் பாற்று.

**830.** பகைநட்பாம் காலம் வருங்கால் முகம்நட்
டகம்நட் பொரீஇ விடல்.

## 84. பேதைமை.

**831.** பேதைமை என்பதொன் றியாதெனின் ஏதம்கொண்
டூதியம் போக விடல்.

**832.** பேதைமையுள்எல்லாம் பேதைமை காதன்மை

கைஅல்ல தன்கண் செயல்.

**833.**

நாணாமை நாடாமை நாரின்மை யாதொன்றும்
பேணாமை பேதை தொழில்.

**834.** ஓதி உணர்ந்தும் பிறர்க்குரைத்தும்
பேதையில் பேதையார் இல்.

தான்அடங்காப்

**835.** ஒருமைச் செயல்ஆற்றும் பேதை
எழுமையும்

தான்புக் கழுந்தும் அளறு.

**836.** பொய்படும் ஒன்றோ புனைபூணும்
கையறியாப்

பேதை வினைமேல் கொளின்.

**837.** ஏதிலார் ஆரத் தமர்பசிப்பர் பேதை
பெருஞ்செல்வம் உற்றக் கடை.

838. மையல் ஒருவன் களித்தற்றால் பேதைதன்
கைஒன் றுடைமை பெறின்.

839. பெரிதினிது பேதையார் கேண்மை; பிரிவின்கண்
பீழை தருவதொன் றில்.

840. கழாஅக்கால் பள்ளியுள் வைத்தற்றால் சான்றோர்
குழாஅத்துப் பேதை புகல்.



## 85. புல்லறிவாண்மை.

841. அறிவின்மை இன்மையுள் இன்மை; பிறிதின்மை
இன்மையா வையா துலகு.

842. அறிவிலான் நெஞ்சுவந் தீதல் பிறிதியாதும்
இல்லை; பெறுவான் தவம்.

843. அறிவிலார் தாம்தம்மைப் பீழிக்கும் பீழை
செறுவார்க்கும் செய்தல் அரிது.

**844.** வெண்மை எனப்படுவ தியாதெனின் ஒண்மை
உடையம்யாம் என்னும் செருக்கு.

**845.** கல்லாத மேற்கொண் டொழுகல் கசடற
வல்லதூஉம் ஐயம் தரும்.

**846.** அற்றம் மறைத்தலோ புல்லறிவு தம்வயின்
குற்றம் மறையா வழி.

**847.** அருமறை சோரும் அறிவிலான் செய்யும்
பெரும்இறை தானே தனக்கு.

**848.** ஏவவும் செய்கலான்; தான்தேறான்; அவ்வுயிர்
போஒம் அளவும்ஓர் நோய்.

**849.** காணாதான் காட்டுவான் தான்காணான்; காணாதான்
கண்டானாம் தான்கண்ட வாறு.

**850.** உலகத்தார் உண்டென்ப தில்என்பான் வையத்
தலகையா வைக்கப் படும்.

## 86. இகல்.

**851.** இகல்என்ப எல்லா உயிர்க்கும் பகல்என்னும்

பண்பின்மை பாரிக்கும் நோய்.

852. பகல்கருதிப் பற்ரு செயினும் இகல்கருதி
இன்னுசெய் யாமை தலை.

பால்] **87. பகைமாட்சி.**

69

853. இகல்என்னும் எவ்வம்நோய் நீக்கின்
தவல்இல்லாத்

தாவில் விளக்கம் தரும்.

854.

இன்பத்துள் இன்பம் பயக்கும் இகல்என்னும்
துன்பத்துள் துன்பம் கெடின்.

855.

இகல்எதிர் சாய்ந்தொழுக வல்லாரை யாரே
மிகல்ஊக்கும் தன்மை யவர்?

856. இகலின் மிகல்இனி தென்பவன் வாழ்க்கை
தவலும் கெடலும் நணித்து.

857. மிகல்மேவல் மெய்ப்பொருள் காணார்.
இகல்மேவல்
இன்னா அறிவி னவர்.

858. இகலிற் கெதிர்சாய்தல் ஆக்கம்; அதனை
மிகல்ஊக்கின் ஊக்குமாம் கேடு.

859. இகல்காணான் ஆக்கம் வரும்கால்; அதனை
மிகல்காணும் கேடு தரற்கு.

860. இகலான்ஆம் இன்னாத எல்லாம்;
நகலான்ஆம்
நல்நயம் என்னும் செருக்கு.

## 87. *பகைமாட்சி.*

861. வலியார்க்கு மாறேற்றல் ஓம்புக; ஓம்பா
மெலியார்மேல் மேக பகை.

862. அன்பிலன்; ஆன்ற துணைஇலன்;
தான்துவ்வான்;
என்பரியும் ஏதிலான் துப்பு?

863. அஞ்சும்; அறியான்; அமைவிலன்; ஈகலான்;
தஞ்சம் எளியன் பகைக்கு.

**864.** நீங்கான் வெகுளி நிறையிலன் எஞ்ஞான்றும்
யாங்கணும் யார்க்கும் எளிது.

**865.** வழிநோக்கான்; வாய்ப்பன செய்யான்; பழிநோக்கான்
பண்பிலான் பற்றார்க் கினிது.



**866.** காணாச் சினத்தான் கழிபெரும் காமத்தான்
பேணாமை பேணப் படும்.

**867.** கொடுத்தும் கொளல்வேண்டும் மன்ற அடுத்திருந்து
மாணாத செய்வான் பகை.

**868.** குணன் இலனாய்க் குற்றம் பலவாயின் மாற்றார்க்
கினன் இலனாம் ஏமாப் புடைத்து.

**869.** செறுவார்க்குச் சேண்இகவா இன்பம் அறிவிலா

அஞ்சும் பகைவர்ப் பெறின்.

870. கல்லான் வெகுளும் சிறுபொருள் எஞ்ஞான்றும்

ஒல்லானை ஒல்லா தொளி.

## 88. பகைத்திறம் தெரிதல்.

871. பகைஎன்னும் பண்பிலதனை ஒருவன்
நகையேயும் வேண்டற்பாற் றன்று.

872. வில்லேர் உழவர் பகைகொளினும் கொள்ளற்க

சொல்லேர் உழவர் பகை.

873. ஏமுற் றவரினும் ஏழை தமியனாய்ப்
பல்லார் பகைகொள் பவன்.

874. பகைநட்பாக் கொண்டொழுகும் பண்புடை யாளன்

தகைமைக்கண் தங்கிற் றுலகு.

875. தன்துணை இன்றால்; பகைஇரண்டாம்; தான்ஒருவன்

இன்துணையாக் கொள்கவற்றின் ஒன்று.

876. தேறினும் தேறா விடினும் அழிவின்கண்

தேறுன் பகாஅன் விடல்.

877. நோவற்க நொந்த தறியார்க்கு; மேவற்க
மென்மை பகைவர் அகத்து.

878. வகைஅறிந்து தன்செய்து தன்காப்ப மாயும்
பகைவர்கண் பட்ட செருக்கு.

பால் 71.

## 89. உட்புகை.

879. இளைதாக முள்மரம் கொல்க; களையுநர்
கைகொல்லும் காழ்த்த இடத்து.

880. உயிர்ப்ப உளர்அல்லர் மன்ற செயிர்ப்பவர்
செம்மல் சிதைக்கலா தார்.

## 89. உட்பகை.

881. நிழல்நீரும் இன்னாத இன்னா; தமர்நீரும்
இன்னாஆம் இன்னா செயின்.

882. வாள்போல் பகைவரை அஞ்சற்க; அஞ்சுக
கேள்போல் பகைவர் தொடர்பு.

**883.** உள்பகை அஞ்சித்தன் காக்க; உலைவிடத்து
மண்பகையின் மாணத் தெறும்.

**884.** மனம்மாணு உள்பகை தோன்றின்
இனம்மாணு
ஏதம் பலவும் தரும்.

**885.** உறன்முறையான் உள்பகை தோன்றின்
ஏதம் பலவும் தரும்.
இறன்முறை
[யான்

**886.** ஒன்றாமை ஒன்றியார் கண்படின்
எஞ்ஞான்றும்
பொன்றாமை ஒன்றல் அரிது.

**887.** செப்பின் புணர்ச்சிபோல் கூடினும்
கூடாதே
உள்பகை உற்ற குடி.

**888.** அரம்பொருத பொன்போலத் தேயும்
உரம்பொரு
துள்பகை உற்ற குடி.

**889.** என்பக வன்ன சிறுமைத்தே ஆயினும்

உள்பகை உள்ளதாம் கேடு.

890. உடம்பா டிலாதவர் வாழ்க்கை குடங்கர்உள்

பாம்போ டுடன்உறைந் தற்று.



## 90. பெரியாரைப் பிழையாமை

891. ஆற்றுவார் ஆற்றல் இகழாமை போற்றுவார்
போற்றலுள் எல்லாம் தலை.

892. பெரியாரைப் பேணு தொழுகின் பெரியாரால்
பேரா இடும்பை தரும்.

893. கெடல்வேண்டின் கேளாது செய்க அடல்வேண்டின்

ஆற்று பவர்கண் இழுக்கு.

894. கூற்றத்தைக் கையால் விளித்தற்றால் ஆற்றுவார்க்

காற்றாதார் இன்னா செயல்.

895. யாண்டுச்சென் றியாண்டும் உளர்ஆகார் வெந்துப்பின்

வேந்து செறப்பட் டவர்.

**896.** எரியால் சுடப்படினும் உய்வுண்டாம்; உய்யார்

பெரியார்ப் பிழைத்தொழுகு வார்.

**897.** வகைமாண்ட வாழ்க்கையும் வான்பொருளும் என்

தகைமாண்ட தக்கார் செறின்?

[ன்னும்

**898.** குன்றன்னார் குன்ற மதிப்பின் குடியொடு
நின்றன்னார் மாய்வர் நிலத்து.

**899.** ஏந்திய கொள்கையார் சீறின் இடைமுரிந்து
வேந்தனும் வேந்து கெடும்.

**900.** இறந்தமைந்த சார்புடையார் ஆயினும் உய்யார்

சிறந்தமைந்த சீரார் செறின்.

## 91. பெண்வழிச் சேரல்

**901.** மனைவிழைவார் மாண்பயன் எய்தார்; வினைவிழை

வேண்டாப் பொருளும் அது.

[வார்

902. பேணுது பெண்விழைவான் ஆக்கம்
பெரியதோர்

நாணுக நாணுத் தரும்.



903.

இல்லாள்கண் தாழ்ந்த இயல்பின்மை எஞ்ஞான்றும்
நல்லாருள் நாணுத் தரும்.

904. மனையாளை அஞ்சும் மறுமையி லாளன்
வினையாண்மை வீறெய்தல் இன்று.

905. இல்லாளை அஞ்சுவான் அஞ்சுமற்
றெஞ்ஞான்றும்

நல்லார்க்கு நல்ல செயல்.

906. இமையாரின் வாழினும் பாடிலரே
இல்லாள்

அமைஆர்தோள் அஞ்சு பவர்.

907. பெண்ஏவல் செய்தொழுகும்
ஆண்மையின் நாணுடைப்

பெண்ணே பெருமை உடைத்து.

908. நட்டார் குறைமுடியார் நன்றாற்றார் நல்நுதலாள்

பெட்டாங் கொழுகு பவர்.

909. அறவினையும் ஆன்ற பொருளும் பிறவினையும்

பெண்ஏவல் செய்வார்கண் இல்.

910. எண்சேர்ந்த நெஞ்சத் திடன்உடையார்க் கெஞ்ஞான்றும்

பெண்சேர்ந்தாம் பேதைமை இல்.

## 92. வரைவின் மகளிர்.

911. அன்பின் விழையார் பொருள்விழையும் ஆய்தொடியார்
இன்சொல் இழுக்குத் தரும்.

912. பயன்தூக்கிப் பண்புரைக்கும் பண்பின் மகளிர்
நயன்தூக்கி நள்ளா விடல்.

913. பொருள்பெண்டிர் பொய்ம்மை முயக்கம் இருட்டறை

எதில் பிணம்தழீஇ அற்று.
[யில்

914. பொருள்பொருளார் புன்நலம் தோயார் அருள்பொருள்
ஆயும் அறிவி னவர்.

*915. பொதுநலத்தார் புன்நலம் தோயார் மதிநலத்தின்
மாண்ட அறி வினவர்.

16



916. தம்நலம் பாரிப்பார் தோயார் தகைசெருக்கிப்
புன்நலம் பாரிப்பார் தோள்.

917. நிறைநெஞ்சம் இல்லவர் தோய்வர் பிறநெஞ்சில்
பேணிப் புணர்பவர் தோள்.

918. ஆயும் அறிவினர் அல்லார்க் கணங்கென்ப
மாய மகளிர் முயக்கு.

919. வரைவிலா மாண்இழையார் மென்தோள் புரை இலாப்
பூரியர்கள் ஆழும் அளறு.

920. இருமனப் பெண்டிரும் கள்ளும் கவறும்
திருநீக்கப்பட்டார் தொடர்பு.

# 93. கள்ளுண்ணாமை.

921. உட்கப் படாஅர் ஒளிஇழப்பார் எஞ்ஞான்றும்
கள்காதல் கொண்டொழுகு வார்.

922. உண்ணற்க கள்ளை; உணில்உண்க சான்றோரான்
எண்ணப் படவேண்டா தார்.

923. ஈன்றாள் முகத்தேயும் இன்னாதால்; என்மற்றுச்
சான்றோர் முகத்துக் களி?

924. நாண்என்னும் நல்லாள் புறம்கொடுக்கும் கள்என்னும்
பேணாப் பெருங்குற்றத் தார்க்கு.

925. கையறி யாமை உடைத்தே பொருள்கொடுத்து
மெய்அறி யாமை கொளல்.

926. துஞ்சினார் செத்தாரின் வேறல்லர்; எஞ்ஞான்றும்
நஞ்சுண்பார் கள்உண் பவர்.

927. உள்ஒற்றி உள்ளூர் நகப்படுவர் எஞ்ஞான்றும்
கள்ஒற்றிக் கண்சாய் பவர்.

928. களித்தறியேன் என்பது கைவிடுக; நெஞ்சத்

தோளித்ததூஉம் ஆங்கே மிகும்.

பால்]
75

## 94. சூது.

929. களித்தானைக் காரணம் காட்டுதல் கீழ்நீர்க்
குளித்தானைத் தீத்துரீஇ அற்று.

930. கள்உண்ணாப் போழ்தில் களித்தானைக் காணுங்கால்
உள்ளான்கொல் உண்டதன் சோர்வு.

## 94. சூது.

931. வேண்டற்க வென்றிடினும் சூதினை; வென்றதூஉம்
தூண்டில்பொன் மீன்விழுங்கி யற்று.

932. ஒன்றெய்தி நூறிழக்கும் சூதர்க்கும் உண்டாம்கொல்
நன்றெய்தி வாழ்வதோர் ஆறு?

933. உருள்ஆயம் ஓவாது கூறின் பொருள்ஆயம்
போஒய்ப் புறமே படும்.

**934.** சிறுமை பலசெய்து சீர்அழிக்கும் சூதின்
வறுமை தருவதொன் றில்.

**935.** கவறும் கழகமும் கையும் தருக்கி
இவறியார் இல்லாகி யார்.

**936.** அகடாரார் அல்லல் உழப்பர்சூ தென்னும்
முகடியால் மூடப்பட் டார்.

**937.** பழகிய செல்வமும் பண்பும் கெடுக்கும்
கழகத்துக் காலை புகின்.

**938.** பொருள்கெடுத்துப் பொய்மேல் கொளீஇ
அருள்கெடுத் தல்லல் உழப்பிக்கும் சூது.

**939.** உடைசெல்வம் ஊண்ஒளி கல்விஎன்
றைந்தும்
அடையாவாம் ஆயம் கொளின்.

**940.** இழத்தொறூஉம் காதலிக்கும் சூதேபோல்
துன்பம்
உழத்தொறூஉம் காதற் றுயிர்.

---



## 95. மருந்து.

941. மிகினும் குறையினும் நோய்செய்யும் நூலோர்
வளிமுதலா எண்ணிய மூன்று.

942. மருந்தெனவேண்டாவாம் யாக்கைக் கருந்திய
தற்றது போற்றி உணின்.

943. அற்றால் அளவறிந் துண்க; அஃதுடம்பு
பெற்றான் நெடிதுய்க்கும் ஆறு.

944. அற்ற தறிந்து கடைப்பிடித்து மாறல்ல
துய்க்க துவரப் பசித்து.

945. மாறுபா டில்லாத உண்டி மறுத்துண்ணின்
ஊறுபா டில்லை உயிர்க்கு.

946. இழிவறிந் துண்பான்கண் இன்பம்போல்
நிற்கும்

கழிபேர் இரையான்கண் நோய்.

947. தீஅள வன்றித் தெரியான் பெரிதுண்ணின்
நோய்அள வின்றிப் படும்.

948. நோய்நாடி நோய்முதல் நாடி அதுதணிக்கும்
வாய்நாடி வாய்ப்பச் செயல்.

949. உற்றான் அளவும் பிணிஅளவும் காலமும்
கற்றான் கருதிச் செயல்.

950. உற்றவன் தீர்ப்பான் மருந்துழைச்
செல்வானென்

றப்பால்நால் கூற்றே மருந்து.

## 96. குடிமை.

951. இல்பிறந்தார் கண்அல்ல தில்லை இயல்பாகச்
செப்பமும் நாணும் ஒருங்கு.

952. ஒழுக்கமும் வாய்மையும் நாணும்இம் மூன்றும்
இழுக்கார் குடிப்பிறந் தார்.

பால்]
77

## 97. மானம்.

953. நகைஈகை இன்சொல் இகழாமை நான்கும்
வகைஎன்ப வாய்மைக் குடிக்கு.

954. அடுக்கிய கோடி பெறினும் குடிப்பிறந்தார்
குன்றுவ செய்தல் இலர்.

955. வழங்குவ துள்வீழ்ந்தக் கண்ணும் பழம்குடி
பண்பில் தலைப்பிரிதல் இன்று.

956. சலம்பற்றிச் சால்பில செய்யார் மாசற்ற
குலம்பற்றி வாழ்தும்என் பார்.

957. குடிப்பிறந்தார் கண்விளங்கும் குற்றம்
விசும்பின்

மதிக்கண் மறுப்போல் உயர்ந்து.

958. நலத்தின்கண் நாரின்மை தோன்றின்
அவனைக்

குலத்தின்கண் ஐயப் படும்.

959. நிலத்தில் கிடந்தமை கால்காட்டும்; காட்டும்
குலத்தில் பிறந்தார்வாய்ச் சொல்.

960. நலம்வேண்டின் நாண்உடைமை வேண்டும்;
குலம்

வேண்டுக யார்க்கும் பணிவு.
[வேண்டின்

## 97. *மானம்.*

961. இன்றி அமையாச் சிறப்பின ஆயினும
குன்ற வருப விடல்.

962. சீரினும் சீரல்ல செய்யாரே சீரொடு
பேராண்மை வேண்டு பவர்.

963. பெருக்கத்து வேண்டும் பணிதல்; சிறிய

சுருக்கத்து வேண்டும் உயர்வு.

964. தலையின் இழிந்த மயிர்அனையர் மாந்தர்

நிலையின் இழிந்தக் கடை.

965. குன்றின் அனையாரும் குன்றுவர் குன்றுவ

குன்றி அனைய செயின்.



966. புகழ்இன்றால் புத்தேள்நாட் டுய்யாதால் என்மற்
றிகழ்வார்பின் சென்று நிலை?

967. ஒட்டார்பின் சென்றொருவன் வாழ்தலின்
அந்நிலையே
கெட்டான் எனப்படுதல் நன்று.

968. மருந்தோமற் றூன்ஓம்பல் வாழ்க்கை
பெருந்தகைமை
பீடழிய வந்த இடத்து?

969. மயிர் நீப்பின் வாழாக் கவரிமா அன்னார்
உயிர்நீப்பர் மானம் வரின்.

970. இளிவரின் வாழாத மானம் உடையார்
ஒளிதொழு தேத்தும் உலகு.

## 98. பெருமை.

971. ஒளிஒருவற் குள்ள வெறுக்கை; இளிஒருவற்
கஃதிறந்து வாழ்தும் எனல்.

972. பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும்; சிறப்பொவ்வா
செய்தொழில் வேற்றுமை யான்.

973.

மேல்இருந்தும் மேல்அல்லார் மேல்அல்லர்; கீழ்இருந்தும்
கீழ்அல்லார் கீழ்அல் லவர்.

974. ஒருமை மகளிரே போலப் பெருமையும்
தன்னைத்தான் கொண்டொழுகின் உண்டு.

975. பெருமை உடையவர் ஆற்றுவார் ஆற்றின்
அருமை உடைய செயல்.

976. சிறியார் உணர்ச்சியுள் இல்லை; பெரியாரைப்
பேணிக்கொள் வேம்என்னும் நோக்கு.

977. இறப்பே புரிந்த தொழிற்றும் சிறப்பும்தான்
சீர்அல் லவர்கண் படின்.

978. பணியுமாம் என்றும் பெருமை; சிறுமை
அணியுமாம் தன்னை வியந்து.

பால்] 99. சான்றாண்மை.

79 979. பெருமை பெருமிதம் இன்மை; சிறுமை

பெருமிதம் ஊர்ந்து விடல்.

980. அற்றம் மறைக்கும் பெருமை; சிறுமைதான் குற்றமே கூறி விடும்.

## 99. சான்றாண்மை.

981. கடன்என்ப நல்லவை எல்லாம் கடன்அறிந்து
சான்றாண்மை மேற்கொள் பவர்க்கு.

982. குணநலம் சான்றோர் நலனே; பிறநலம்
எந்நலத் துள்ளதூஉம் அன்று.

983. அன்புநாண் ஒப்புரவு கண்ணோட்டம் வாய்மையோ
டைந்துசால் பூன்றிய தூண்.

984. கொல்லா நலத்தது நோன்மை; பிறர்தீமை
சொல்லா நலத்தது சால்பு.

985. ஆற்றுவார் ஆற்றல் பணிதல்; அதுசான்றோர்
மாற்றாரை மாற்றும் படை.

986. சால்பிற்குக் கட்டளை யாதெனில் தோல்வி
துலைஅல்லார் கண்ணும் கோளல்.

987. இன்றுசெய் தார்க்கும் இனியவே செய்யாக்கால்

என்ன பயத்ததோ சால்பு?

988. இன்மை ஒருவர்க் கிளிவன்று சால்பென்னும்

திண்மை உண்டாகப் பெறின்.

989. ஊழி பெயரினும் தாம்பெயரார் சான்றாண்மைக்

காழி எனப்படு வார்.

990. சான்றவர் சான்றாண்மை குன்றின் இருநிலம்தான்

தாங்காது மன்னோ பொறை.

## 100. பண்புடைமை.

991. எண்பதத்தால் எய்தல் எளிதென்ப யார்மாட்டும்

பண்புடைமை என்னும் வழக்கு.



992. அன்புடைமை ஆன்ற குடிப்பிறத்தல் இவ்விரண்டும்

பண்புடைமை என்னும் வழக்கு.

993. உறுப்பொத்தல் மக்கள்ஒப் பன்றால்; வெறுத்தக்க
பண்பொத்தல் ஒப்பதாம் ஒப்பு.

994. நயனொடு நன்றி புரிந்த பயன்உடையார்
பண்புபா ராட்டும் உலகு.

995. நகைஉள்ளும் இன்னாதிகழ்ச்சி; பகைஉள்ளும்
பண்புள பாடறிவார் மாட்டு.

996. பண்புடையார் பட்டுண் டுலகம்; அதுஇன்றேல்
மண்புக்கு மாய்வது மன்.

997. அரம்போலும் கூர்மைய ரேனும் மரம்போல்வர்
மக்கள்பண் பில்லா தவர்.

998. நண்பாற்றார் ஆகி நயம்இல செய்வார்க்கும்
பண்பாற்றார் ஆதல் கடை.

999. நகல்வல்லர் அல்லார்க்கு மாஇரு ஞாலம்
பகலும்பால் பட்டன் றிருள்.

1000. பண்பிலான் பெற்ற பெருஞ்செல்வம் நன்பால்
கலம்தீமை யால்திரிந் தற்று.

## 101. நன்றியில் செல்வம்.

1001. வைத்தான்வாய் சான்ற பெரும்பொருள்
அஃதுண்
சேத்தான்; செயக்கிடந்த தில்.

[ஞென் 1002. பொருளான்ஆம் எல்லாம்என் றீயா
திவறும்

மருளான்ஆம் மாணாப் பிறப்பு.

1003. ஈட்டம் இவறி இசைவேண்டா ஆடவர்
தோற்றம் நிலக்குப் பொறை.

1004. எச்சம்என் றென்எண்ணும் கொல்லோ
ஒருவரால்

நச்சப் படாஅ தவன்.



1005. கொடுப்பதூஉம் துய்ப்பதூஉம் இல்லார்க்
கடுக்கிய

கோடிஉண் டாயினும் இல்.

1006. ஏதம் பெருஞ்செல்வம் தான்துவ்வான்
தக்கார்க்

கீதல் இயல்பிலா தான்.

[கோன்

1007. அற்றார்க்கொன் றாற்றாதான் செல்வம்
மிகநலம்

பெற்றாள் தமியள்மூத் தற்று.

1008. நச்சப் படாதவன் செல்வம் நடுஊருள்
நச்சு மரம்பழுத் தற்று.

1009. அன்போரீஇத் தன்செற் றறம்நோக்கா தீட்டிய
ஒண்பொருள் கொள்வார் பிறர்.

1010. சீர்உடைச் செல்வர் சிறுதுனி மாரி
வறங்கூர்ந் தனைய துடைத்து.

## 102. நாண்உடைமை.

1011. கருமத்தால் நாணுதல் நாணுத் திருநுதல்
நல்லவர் நாணுப் பிற.

1012. ஊண்உடை எச்சம் உயிர்க்கெல்லாம் வேறல்ல;
நாண்உடைமை மாந்தர் சிறப்பு.

1013. ஊனைக்குறித்த உயிர் எல்லாம்; நாண்என்னும்
நன்மை குறித்தது சால்பு.

1014. அணிஅன்றோ நாண்உடைமை சான்றோர்க் கஃதின்
பிணிஅன்றோ பீடு நடை?

[றேல்

1015. பிறர்பழியும் தம்பழியும் நாணுவார் நாணுக்
குறைபதி என்னும் உலகு.

1016. நாண்வேலி கொள்ளாது மன்னோ
வியன்ஞாலம்
பேணலர் மேலா யவர்.

1017. நாணால் உயிரைத் துறப்பர்
உயிர்ப்பொருட்டால்
நாண்துறவார் நாண்ஆள் பவர்.





1018. பிறர்நாணத் தக்கது தான்நாணான் ஆயின்
அறம்நாணத் தக்க துடைத்து.

1019. குலம்சுடும் கொள்கை பிழைப்பின்;
நலம்சுடும்
நாண்இன்மை நின்றக் கடை.

1020. நாண்அகத் தில்லார் இயக்கம் மரப்பாவை
நாணால் உயிர்மருட்டி அற்று.

## 103. குடிசெயல் வகை.

1021. கருமம் செயஒருவன் கைதூவேன் என்னும்

பெருமையில் பீடுடைய தில்.

**1022.** ஆள்வினையும் ஆன்ற அறிவும் எனஇரண்டின்

நீள்வினையால் நீளும் குடி.

**1023.** குடிசெய்வல் என்னும் ஒருவற்குத் தெய்வம்
மடிதற்றுத் தான்முந் துறும்.

**1024.** சூழாமல் தானே முடிவெய்தும் தம்குடியைத்
தாழா துஞற்று பவர்க்கு.

**1025.** குற்றம் இலனாய்க் குடிசெய்து வாழ்வானைச்
சுற்றமாச் சுற்றும் உலகு.

**1026.** நல்ஆண்மை என்ப தொருவற்குத் தான்பிறந்த

இல்ஆண்மை ஆக்கிக் கொளல்.

**1027.** அமர்அகத்து வன்கண்ணர் போலத் தமர் அகத்தும்

ஆற்றுவார் மேற்றே பொறை.

**1028.** குடிசெய்வார்க் கில்லை பருவம்; மடிசெய்து

மானம் கருதக் கெடும்.

**1029.** இடும்பைக்கே கொள்கலம் கொல்லோ குடும்பத்தைக்

குற்றம் மறைப்பான் உடம்பு?

1030. இடுக்கண்கால் கொன்றிட வீழும் அடுத்தூன்றும்

நல்லாள் இலாத குடி.

பால்] 104. உழவு.

83

## 104. உழவு.

1031. சுழன்றும்ஏர்ப் பின்ன துலகம்; அதனால்
உழந்தும் உழவே தலை. 1032.
உழுவார் உலகத்தார்க் காணி அஃதாற்று
தெழுவாரை எல்லாம் பொறுத்து.
1033. உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார்;மற் றெல்லாம்
தொழுதுண்டு பின்செல் பவர். 1034.
பலகுடை நீழலும் தம்குடைக்கீழ்க் காண்பர்
அலகுடைநீழ லவர்.
1035. இரவார்; இரப்பார்க்கொன்றீவர் கரவாது;
கைசெய்தூண் மாலை யவர்.
1036. உழவினார் கைம்மடங்கின் இல்லை விழைவதூஉம்

விட்டேர்என் பார்க்கு நிலே.

1037. தொடிப்புழுதி கஃசா உணக்கில் பிடித்தெருவும்
வேண்டாது சாலப் படும்.

1038. ஏரினும் நன்றால் எருவிடுதல்; கட்டபின்
நீரினும் நன்றதன் காப்பு.

1039. செல்லான் கிழவன் இருப்பின் நிலம்புலந்
தில்லாளின் ஊடி விடும்.

1040. இலம்என் றசைஇ இருப்பாரைக் காணில்
நிலம்என்னும் நல்லாள் நகும்.

## 105. *நல்குரவு.*

1041.
இன்மையின் இன்னாத தியாதெனின் இன்மையின்
இன்மையே இன்னா தது.

1042. இன்மை எனஒரு பாவி மறுமையும்
இம்மையும் இன்றி வரும்.

[பொருட்

**1043.** தொல்வரவும் தோலும் கெடுக்கும் தொகையாக
நல்குர வென்னும் நசை.

**1044.**

இல்பிறந்தார் கண்ணேயும் இன்மை இளிவந்த
சொல்பிறக்கும் சோர்வு தரும்.

**1045.** நல்குர வென்னும் இடும்பையுள் பல்குறைத்
துன்பங்கள் சென்று படும்.

**1046.** நல்பொருள் நன்குணர்ந்து சொல்லினும் நல்கூர்ந்தார்
சொல்பொருள் சோர்வு படும்.

**1047.** அறம்சாரா நல்குர வின்றதா யானும்
பிறன் போல நோக்கப் படும்.

1048. இன்றும் வருவது கொல்லோ நெருநலும்
கொன்றது போலும் நிரப்பு.

1049. நெருப்பினுள் துஞ்சலும் ஆகும் நிரப்பினுள்
யாதொன்றும் கண்பா டரிது.

1050. துப்புர வில்லார் துவரத் துறவாமை
உப்பிற்கும் காடிக்கும் கூற்று.

## 106. *இரவு*

1051. இரக்க இரத்தக்கார்க் காணின்; கரப்பின்
அவர்பழி; தம்பழி அன்று.

1052. இன்பம் ஒருவற்கிரத்தல்இரந்தவை
துன்பம் உறாஅ வரின்.

1053. கரப்பிலா நெஞ்சின் கடன்அறிவார்
முன்நின்

றிரப்பும்ஓர் ஏஎர் உடைத்து.

1054. இரத்தலும் ஈதலே போலும் கரத்தல்
கனவிலும் தேற்றாதார் மாட்டு.

1055. கரப்பிலார் வையகத் துண்மையால்
கண்நின்

றிரப்பவர் மேல்கொள் வது.



## 107. *இரவச்சம்*

1056. கரப்பிடும்பை இல்லாரைக் காணின்

நிரப்பிடும்பை

எல்லாம் ஒருங்கு கெடும்.

1057. இகழ்ந்தெள்ளா தீவாரைக் காணின்

உள்ளுள் உவப்ப துடைத்து.

மகிழ்ந்துள்ளம்

1058.

இரப்பாரை இல்லாயின் ஈர்ங்கண்மா ஞாலம்

மரப்பாவை சென்றுவந் தற்று.

1059. ஈவார்கண் என்உண்டாம் தோற்றம்

இரந்துகோள்

மேவார் இலாஅக் கடை?

1060.

இரப்பான் வெகுளாமை வேண்டும்; நிரப்பிடும்பை
தானேயும் சாலும் கரி.

## 107. இரவச்சம்

**1061.** கரவா துவந்தீயும் கண்அன்னார் கண்ணும்
இரவாமை கோடி உறும்.

**1062.**

இரந்தும் உயிர்வாழ்தல் வேண்டின் பரந்து
கெடுக உலகியற்றி யான்.

**1063.**

இன்மை இடும்பை இரந்துதீர் வாம்என்னும்
வன்மையின் வன்பாட்ட தில்.

**1064.** இடம்எல்லாம் கொள்ளாத் தகைத்தே
இடம்இல்லாக்

காலும் இரவொல்லாச் சால்பு.

**1065.** தெண்ணீர் அடுபுற்கை ஆயினும் தாள்தந்த

துண்ணலின் ஊங்கினிய தில்.

1066. ஆவிற்கு நீர்என் றிரப்பினும் நாவிற்
கிரவின் இளிவந்த தில்.

1067. இரப்பன் இரப்பாரை எல்லாம் இரப்பின்
கரப்பார் இரவன்மின் என்று.

1068. இரவென்னும் எமாப்பில் தோணி கரவென்னும்
பார்தாக்கப் பக்கு விடும்.



1069. இரவுள்ள உள்ளம் உருகும்; கரவுள்ள
உள்ளதூஉம் இன்றிக் கெடும்.

1070. கரப்பவர்க் கியாங்கொளிக்கும் கொல்லோ? இரப்பவர்
சொல்லாடப் போஒம் உயிர்.

## 108. *கயமை.*

1071. மக்களே போல்வர் கயவர்; அவர்அன்ன
ஒப்பா ரியாங்கண்ட தில்.

1072. நன்றறி வாரில் கயவர் திருவுடையர்
நெஞ்சத் தவலம் இலர்.

1073. தேவர் அனையர் கயவர் அவரும்தாம்
மேவன செய்தொழுக லான்.

1074. அகப்பட்டி ஆவாரைக் காணின் அவரின்
மிகப்பட்டுச் செம்மாக்கும் கீழ்.

1075. அச்சமே;கீழ்கள தாசாரம் எச்சம்
அவாஉண்டேல் உண்டாம் சிறிது.

1076. அறைபறை அன்னர் கயவர்தாம் கேட்ட
மறைபிறர்க் குய்த்துரைக்க லான்.

1077. ஈர்ங்கை விதிரார் கயவர் கொடிறுடைக்கும்
கூன்கையர் அல்லா தவர்க்கு.

1078. சொல்லப் பயன்படுவர் சான்றோர்;
கரும்புபோல்

கொல்லப் பயன்படுவர் கீழ்.

1079. உடுப்பதூஉம் உண்பதூஉம் காணின்
பிறர்மேல்

வடுக்காண வற்றாகும் கீழ்.

1080. எற்றிற் குரியர் கயவர்? ஒன் றுற்றக்கால்
விற்றற் குரியர் விரைந்து.

# இன்பத்துப்பால்

## 109. தகையணங்குறுத்தல்.

1081.

அணங்குகொல் ஆய்மயில் கொல்லோ? கனம்குழை
மாதர்கொல்? மாலும்என் நெஞ்சு.

**1082.** நோக்கினாள் நோக்கெதிர் நோக்குதல் தாக்கணங்கு
தானைக்கொண் டன்ன துடைத்து.

**1083.** பண்டறியேன் கூற்றென் பதனை; இனிஅறிந்தேன்
பெண்தகையால் பேர்அமர்க் கட்டு.

**1084.** கண்டார் உயிர்உண்ணும் தோற்றத்தால் பெண்தகைப்
பேதைக் கமர்த்தன கண்.

**1085.** கூற்றமோ? கண்ணோ? பிணையோ! மடவரல்
நோக்கம்இம் மூன்றும் உடைத்து.

**1086.** கொடும்புருவம் கோடா மறைப்பின்

நடுங்கஞர்

செய்யல மன்இவள் கண்.

1087. கடாஅக் களிற்றின்மேல் கண்படாம் மாதர்
படாஅ முலைமேல் துகில்.

1088. ஒள்நுதற் கோஒ உடைந்ததே ஞாட்பினுள்
நண்ணாரும் உட்கும்என் பீடு.

1089. பிணைஏர் மடநோக்கும் நாணும் உடையாட்
கணிஎவனோ ஏதில தந்து?

1090. உண்டார்கண் அல்ல தடுநறுக் காமம்போல்
கண்டார் மகிழ்செய்தல் இன்று.

## 110. குறிப்பறிதல்.

1091. இருநோக் கிவள்உண்கண் உள்ள
தொருநோக்கு நோய்நோக்கொன் றந்நோய்

மருந்து.



1092. கண்களவு கொள்ளும் சிறுநோக்கம்
காமத்தில்

செம்பாகம் அன்று; பெரிது.

1093. நோக்கினாள்; நோக்கி இறைஞ்சினாள்;

அஃதவள்

யாப்பினுள் அட்டிய நீர்.

1094. யான்நோக்கும் காலை நிலன்நோக்கும்; நோக்காக்கால்

தான்நோக்கி மெல்ல நகும்.

1095. குறிக்கொண்டு நோக்காமை அல்லால் ஒருகண்

சிறக்கணித்தாள் போல நகும்.

1096. உறாஅ தவர்போல் சொலினும் செறாஅர்சொல்

ஒல்லை உணரப் படும்.

1097. செறாஅச் சிறுசொல்லும் செற்றார்போல் நோக்கும்

உறாஅர்போன் றுற்றார் குறிப்பு.

1098. அசைஇயற் குண்டாண்டோர் ஏஎர்;யான் நோக்கப்

பசையினள் பைய நகும்.

1099. ஏதிலார் போலப் பொதுநோக்கு நோக்குதல்

காதலார் கண்ணே உள.

1100.

கண்ணோடு கண்ணிணை நோக்கொக்கின் வாய்ச்சொற்கள்
என்ன பயனும் இல.

## 111. புணர்ச்சி மகிழ்தல்

1101. கண்டுகேட் டுண்டுயிர்த் துற்றறியும் ஐம்புலனும்
ஒண்தொடி கண்ணே உள.

1102. பிணிக்கு மருந்து பிறமன் அணிஇழை
தன்நோய்க்குத் தானே மருந்து.

1103. தாம்வீழ்வார் மென்தோள் துயிலின் இனிதுகொல்
தாமரைக் கண்ணான் உலகு?

1104. நீங்கின் தெறூஉம்; குறுகுங்கால் தண்ணென்னும்;
தீயாண்டுப் பெற்றாள் இவள்?

பால்]

## 112. நலம்புனைந் துரைத்தல்

1105. வேட்ட பொழுதின் அவைஅவை போலுமே
தோட்டார் கதுப்பினாள் தோள்.

1106. உறுதோ றுயிர்தளிர்ப்பத் தீண்டலால் பேதைக்
கமிழ்தின் இயன்றன தோள். 1107.

தம்இல் இருந்து தமதுபாத் துண்டற்றால்
அம்மா அரிவை முயக்கு.

1108. வீழும் இருவர்க் கினிதே வளிஇடை
போழப் படாஅ முயக்கு. 1109.

ஊடல் உணர்தல் புணர்தல் இவைகாமம்
கூடியார் பெற்ற பயன்.

1110. அறிதோ றறியாமை கண்டற்றால் காமம்
செறிதோறும் சேயிழை மாட்டு.

## 112. நலம்புனைந் துரைத்தல்.

1111. நன்னீரை வாழி; அனிச்சமே! நின்னினும்
மென்னீரள் யாம்வீழ் பவள்.

1112. மலர்காணின் மையாத்தி நெஞ்சே!
இவள்கண்
பலர்காணும் பூஒக்கும் என்று.

1113. முறிமேனி முத்தம் முறுவல் வெறிநாற்றம்

வேல்உண்கண் வேய்த்தோ ளவட்கு.

1114. காணின் குவளை கவிழ்ந்து நிலன்நோக்கும்
மாண்இழை கண்ஒவ்வேம் என்று.

1115. அனிச்சப்பூக் கால்களையாள் பெய்தாள்; நுசுப்பிற்கு
நல்ல படாஅ பறை.

1116. மதியும் மடந்தை முகனும் அறியா
பதியில் கலங்கிய மீன்.



1117. அறுவாய் நிறைந்த அவிர்மதிக்குப் போல
மறுஉண்டோ மாதர் முகத்து.

1118. மாதர் முகம்போல் ஒளிவிட வல்லையேல்
காதலை; வாழி மதி!

1119. மலர்அன்ன கண்ணாள் முகம்ஒத்தி ஆயின்
பலர்காணத் தோன்றல் மதி!

1120. அனிச்சமும் அன்னத்தின் தூவியும் மாதர்
அடிக்கு நெருஞ்சிப் பழம்.

## 113. காதல் சிறப்புரைத்தல்.

1121. பாலொடு தேன்கலந் தற்றே பணிமொழி
வால்எயி றூறிய நீர்.

1122. உடம்போ டுயிர்இடை என்னமற் றன்ன
மடந்தையொ டெம்மிடை நட்பு.

1123. கருமணியில் பாவாய்; நீ போதாய்;யாம் வீழும்
திருநுதற் கில்லை இடம்.

1124. வாழ்தல் உயிர்க்கன்னள் ஆய்இழை; சாதல்
அதற்கன்னள் நீங்கும் இடத்து.

1125. உள்ளுவன் மன்யான் மறப்பின் மறப்பறியேன்
ஒள்அமர்க் கண்ணாள் குணம்.

1126. கண்உள்ளில் போகார்; இமைப்பின் பருவரார்;
நுண்ணியர்;எம் காத லவர்.

1127. கண்உள்ளார் காத லவராகக் கண்ணும்
எழுதேம் கரப்பாக் கறிந்து.

1128. நெஞ்சத்தார் காத லவராக வெய்துண்டல்
அஞ்சுதும் வேபாக் கறிந்து.

1129. இமைப்பின் கரப்பாக் கறிவல்; அனைத்திற்கே
ஏதிலர் என்னும்இவ் வூர்.

பால்] 115. அலரறிவுறுத்தல்
91

1130. உவந்துறைவர் உள்ளத்துள் என்றும்; இகந்துறைவர்;
ஏதிலர்; என்னும்இவ் வூர்.

## 114. நாணுத்துறவுரைத்தல்.

1131. காமம் உழந்து வருந்தினார்க் கேமம்
மடல்அல்ல தில்லை வலி.

1132. நோனா உடம்பும் உயிரும் மடல்ஏறும்
நாணினை நீக்கி நிறுத்து.

1133. நாணொடு நல்ஆண்மை பண்டுடையேன்; இன்றுடை-
காமுற்றார் ஏறும் மடல். [யேன்

1134. காமக் கடும்புனல் உய்க்குமே நாணொடு

நல்லாண்மை என்னும் புணை.

**1135.** தொலைக் குறுந்தொடி தந்தாள் மடலோடு
மாலை உழக்கும் துயர்.

**1136.**
மடல்ஊர்தல் யாமத்தும் உள்ளுவேன்; மன்ற
படல்ஒல்லா பேதைக்கென் கண்.

**1137.** கடல்அன்ன காமம் உழந்தும் மடல்ஏறாப்
பெண்ணில் பெருந்தக்க தில்.

**1138.** நிறைஅரியர் மன்அளியர் என்னாது காமம்
மறைஇறந்து மன்று படும்.

**1139.** அறிகிலார் எல்லாரும் என்றேஎன் காமம்
மறுகில் மறுகும் மருண்டு.

**1140.** யாம்கண்ணின் காண நகுப அறிவில்லார்
யாம்பட்ட தாம்படா ஆறு.

## 115. *அலர்அறி வுறுத்தல்.*

**1141.** அலர்எழ ஆர்உயிர் நிற்கும்; அதனைப்
பலர்அறியார் பாக்கியத் தால்.

1142. மலர்அன்ன கண்ணாள் அருமை அறியாது
அலர்எமக் கீந்ததிவ் வூர்.

1143. உறாஅதோ ஊர்அறிந்த கௌவை? அதனைப்
பெறாஅது பெற்றன்ன நீர்த்து.

1144. கவ்வையால் கவ்விது காமம்; அதுஇன்றேல்
தவ்வென்னும் தன்மை இழந்து.

1145.
களித்தொறும் கள்உண்டல் வேட்டற்றால்; காமம்
வெளிப்படு தோறும் இனிது.

1146. கண்டது மன்னும் ஒருநாள்; அலர்மன்னும்
திங்களைப் பாம்புகொண் டற்று.

1147. ஊரவர் கௌவை எருவாக அன்னைசொல்
நீராக நீளும்இந் நோய்.

1148. நெய்யால் எரிநுதுப்பேம் என்றற்றால்
கௌவையால்

காமம் நுதுப்பேம் எனல்.

1149. அலர்நாண ஒல்வதோ அஞ்சலோம்

பென்றார்

பலர்நாண நீத்தக் கடை?

1150. தாம்வேண்டின் நல்குவர் காதலர்; யாம்வேண்டும்

கௌவை எடுக்கும்இவ் வூர்.

## 116. பிரிவாற்றாமை. 1151.

செல்லாமை உண்டேல் எனக்குரை; மற்றுநின்
வல்வரவு வாழ்வார்க் குரை.

1152. இன்கண் உடைத்தவர் பார்வல்; பிரிவஞ்சும்
புன்கண் உடைத்தால் புணர்வு.

1153. அரிதரோ தேற்றம் அறிவுடையார் கண்ணும்
பிரிவோர் இடத்துண்மை யான்.

1154. அளித்தஞ்சல் என்றவர் நீப்பின் தெளித்தசொல்
தேறியார்க் குண்டோ தவறு?

பால்] 117. படர்மெலிந்திரங்கல்.

93

1155. ஓம்பின் அமைந்தார் பிரிவோம்பல்; மற்றவர்

நீங்கின் அரிதால் புணர்வு.

1156. பிரிவுரைக்கும் வன்கண்ணர் ஆயின் அரிதவர்
நல்குவர் என்னும் நசை.

1157. துறைவன் துறந்தமை தூற்றாகொல் முன்கை
இறைஇறவா நின்ற வளை?

1158. இன்னா தினன் இல்ஊர் வாழ்தல்;
அதனினும்
இன்னா தினியார்ப் பிரிவு.

1159. தொடின்சுடின் அல்லது காமநோய் போல
விடின்சுடல் ஆற்றுமோ தீ?

1160. அரிதாற்றி அல்லல்நோய் நீக்கிப் பிரிவாற்றிப்
பின்இருந்து வாழ்வார் பலர்.

## 117. *படர்மெலிந்திரங்கல்.*

1161. மறைப்பேன்மன் யான்இஃதோ நோயை
இறைப்பவர்க்
கூற்றுநீர் போல மிகும்.

1162. கரத்தலும் ஆற்றேன்இந் நோயைநோய்
செய்தார்க்
குரைத்தலும் நாணுத் தரும்.

1163. காமமும் நாணும் உயிர்காவாத் தூங்கும்என்
நோனா உடம்பின் அகத்து.

1164. காமக் கடல்மன்னும் உண்டே; அதுநீந்தும்
ஏமப் புணைமன்னும் இல்.

1165. துப்பின் எவன்ஆவர் மன்கொல் துயர்வரவு
நட்பினுள் ஆற்று பவர்.

1166. இன்பம் கடல்அற்றுக் காமம்மற்
றஃதடும்கால்
துன்பம் அதனில் பெரிது.

1167. காமக் கடும்புனல் நீந்திக் கரைகாணேன்
யாமத்தும் யானே உளேன்.



1168. மன்உயிர் எல்லாம் துயிற்றி அளித்திரா
என்அல்லது இல்லை துணை.

1169. கொடியார் கொடுமையில் தாம்கொடிய இந்நாள்
நெடிய கழியும் இரா.

1170. உள்ளம்போன் றுள்வழிச் செல்கிற்பின்
வெள்ளநீர்
நீந்தல மன்னோஎன் கண்.

## 118. கண்விதுப் பழிதல்.

**1171.** கண்தாம் கலுழ்வ தேவன்கொலோ தண்டாநோய்
தாம்காட்ட யாம்கண் டது.

**1172.** தெரிந்துணரா நோக்கிய உண்கண் பரிந்துணராப்
பைதல் உழப்ப தேவன்?

**1173.** கதும்எனத் தாம்நோக்கித் தாமே கலுழும்
இதுநகத் தக்க துடைத்து.

**1174.** பெயல்ஆற்ரு நீர்உலந்த உண்கண் உயல்ஆற்ரு
உய்வில்நோய் என்கண் நிறுத்து.

**1175.** படல்ஆற்ரு பைதல் உழக்கும் கடல்ஆற்ருக்
காமநோய் செய்தஎன் கண்.

**1176.** ஓஒ இனிதே எமக்கிந்நோய் செய்தகண்
தாஅம் இதன்பட் டது.

**1177.** உழந்துழந் துள்நீர் அறுக விழைந்திழைந்து
வேண்டி அவர்க்கண்ட கண்.

**1178.** பேணுது பெட்டார் உளர்மன்னே? மற்றவர்க்

காணா தமைவில கண்.

1179.

வாராக்கால் துஞ்சா; வரின்துஞ்சா; ஆயிடை
ஆரஞர் உற்றன கண்.

1180. மறைபெறல் ஊரார்க் கரிதன்றால் எம்போல்
அறைபறை கண்ணார் அகத்து.

பால்]

95

## 119. *பசப்புறு பருவரல்*

1181. நயந்தவர்க்கு நல்காமை நேர்ந்தேன்; பசந்தஎன்
பண்பியார்க் குரைக்கோ பிற?

1182. அவர்தந்தார் என்னும் தகையால் இவர்தந்தென்
மேனிமேல் ஊரும் பசப்பு.

1183. சாயலும் நாணும் அவர்கொண்டார் கைம்மாறா
நோயும் பசலையும் தந்து.

1184. உள்ளுவன் மன்யான்; உரைப்ப

தவிர்திறமால்

கள்ளம் பிறவோ பசப்பு.

1185. உவக்காண்எம் காதலர் செல்வார்
இவக்காண்என்

மேனி பசப்பூர் வது.

1186. விளக்கற்றம் பார்க்கும் இருளேபோல்
கொண்கன்

முயக்கற்றம் பார்க்கும் பசப்பு.

1187. புல்லிக் கிடந்தேன் புடைபெயர்ந்தேன்;
அவ்வளவில்

அள்ளிக்கொள் வற்றே பசப்பு.

1188. பசந்தாள் இவள்என்ப தல்லால் இவளைத்
துறந்தார் அவர்என்பார் இல்.

1189. பசக்கமன் பட்டாங்கென்
மேனி நயப்பித்தார்

நன்னிலையர் ஆவர் எனின்.

1190. பசப்பெனப் பேர்பெறுதல் நன்றே
நயப்பித்தார்

நல்காமை தூற்றார் எனின்.

## 120 *தனிப்படர் மிகுதி.*

1191. தாம்வீழ்வார் தம்வீழப் பெற்றவர் பெற்றாரே

காமத்துக் காழில் கனி.

1192.
வாழ்வார்க்கு வானம் பயந்தற்றால் வீழ்வார்க்கு
வீழ்வார் அளிக்கும் அளி.



1193. வீழுநர் வீழப் படுவார்க் கமையுமே
வாழுநம் என்னும் செருக்கு.

1194. வீழப் படுவார் கெழீஇஇலர் தாம்வீழ்வார்
வீழப் படாஅர் எனின்.

1195. நாம்காதல் கொண்டார் நமக்கெவன் செய்பவோ
தாம்காதல் கொள்ளாக் கடை?

1196. ஒருதலையான் இன்னாது காமம்;காப் போல
இருதலை யானும் இனிது.

1197. பருவரலும் பைதலும் காணான்கொல் காமன்
ஒருவர்கண் நின்றொழுகு வான்?

1198. வீழ்வாரின் இன்சொல் பெறாஅ துலகத்து
வாழ்வாரின் வன்கணார் இல்.

1199. நசைஇயார் நல்கார் எனினும் அவர்மாட்
டிசையும் இனிய செவிக்கு.

1200. உருஅர்க் குறுநோய் உரைப்பாய் கடலைச்
சேருஅய்; வாழிய நெஞ்சு.

## 121. நினைந்தவர் புலம்பல்.

1201. உள்ளினும் தீராப் பெருமகிழ் செய்தலால்
கள்ளினும் காமம் இனிது.

1202. எனைத்தொன் றினிதேகாண் காமம்;தாம் வீழ்வார்
நினைப்ப வருவதொன் றில்.

1203. நினைப்பவர் போன்று நினையார்கொல்; தும்மல்
சினைப்பது போன்று கெடும்.

1204. யாமும் உளேம்கொல் அவர்நெஞ்சத் தெம்நெஞ்சத்
தோஒ உளரே அவர்?

1205. தம்நெஞ்சத் தெம்மைக் கடிகொண்டார் நாணார்கொல்
எம்நெஞ்சத் தோவா வரல்.

பால்]

## 122. கனவு நிலை உரைத்தல்.

97 1206. மற்றியான் என்உளேன் மன்னோ? அவரொடியான்
உற்றநாள் உள்ள உளேன்.

1207. மறப்பின் எவன்ஆவன் மன்கொல்;

மறப்பறியேன்

உள்ளினும் உள்ளம் சுடும்.

1208. எனைத்து நினைப்பினும் காயார்;
காதலர் செய்யும் சிறப்பு?
அனைத்தன்றோ

1209. விளியும்என் இன்உயிர் வேறல்லம் என்பார்
அளிஇன்மை ஆற்ற நினைந்து.

1210. விடாஅது சென்றாரைக் கண்ணினால் காணப்
படாஅதி; வாழி மதி!

## 122. கனவு நிலை உரைத்தல்.

1211. காதலர் தூதொடு வந்த கனவினுக்
கியாதுசெய் வேன்கொல் விருந்து?

1212. கயல்உண்கண் யான்இரப்பத் துஞ்சின்
கலந்தார்க்

குயல்உண்மை சாற்றுவேன் மன்.

1213. நனவினால் நல்கா தவரைக் கனவினால்
காண்டலின் உண்டென் உயிர்.

1214. கனவினால் உண்டாகும் காமம் நனவினால்
நல்காரை நாடித் தரற்கு.

1215. நனவினால் கண்டதூஉம் ஆங்கே

கனவும்தான்

கண்ட பொழுதே இனிது.

1216. நனவென ஒன்றில்லை யாயின் கனவினால்
காதலர் நீங்கலர் மன்.

1217. நனவினால் நல்காக் கொடியார் கனவினால்
என்எம்மைப் பீழிப் பது?

1218. துஞ்சும்கால் தோள்மேலர் ஆகி விழிக்கும்கால்
நெஞ்சத்தர் ஆவர் விரைந்து.



1219. நனவினால் நல்காரை நோவர் கனவினால்
காதலர்க் காணா தவர்.

1220. நனவினால் நம்நீத்தார் என்பர் கனவினால்
காணார்கொல் இவ்வூரவர்.

## 123. பொழுதுகண்டிரங்கல்.

1221. மாலையோ அல்லை; மணந்தார் உயிர்உண்ணும்
வேலைநீ; வாழி பொழுது!

1222. புன்கண்ணை; வாழி மருள்மாலை!

எம்கேள்போல்

வன்கண்ண தோநின் துணை?

1223. பனிஅரும்பிப் பைதல்கொள் மாலை துனிஅரும்பித்

துன்பம் வளர வரும்.

1224. காதலர் இல்வழி மாலை கொலைக்களத்து

ஏதிலர் போல வரும்.

1225. காலைக்குச் செய்தநன் றென்கொல் எவன்கொல்யான்

மாலைக்குச் செய்த பகை?

1226. மாலைநோய் செய்தல் மணந்தார் அகலாத

காலை அறிந்த திலேன்.

1227. காலை அரும்பிப் பகல்எல்லாம் போதாகி

மாலை மலரும்இந் நோய்.

1228. அழல்போலும் மாலைக்குத் தூதாகி ஆயன்

குழல்போலும் கொல்லும் படை.

1229. பதிமருண்டு பைதல் உழக்கும் மதிமருண்டு

மாலை படர்தரும் போழ்து.

1230. பொருள்மாலை ஆளரை உள்ளி மருள்மாலை

மாயும்என் மாயா உயிர்.

## 124. உறுப்பு நலன் அழிதல்.

**1231.** சிறுமை நமக்கொழியச் சேண்சென்றார் உள்ளி
நறுமலர் நாணின கண்.

**1232.** நயந்தவர் நல்காமை சொல்லுவ போலும்
பசந்து பனிவாரும் கண்.

**1233.** தணந்தமை சால அறிவிப்ப போலும்
மணந்தநாள் வீங்கிய தோள்.

**1234.** பணைநீங்கிப் பைந்தொடி சோரும் துணைநீங்கித்
தொல்கவின் வாடிய தோள்.

**1235.** கொடியார் கொடுமை உரைக்கும் தொடியொடு
தொல்கவின் வாடிய தோள்.

**1236.** தொடியொடு தோள்நெகிழ நோவல் அவரைக்
கொடியர் எனக்கூறல் நொந்து

**1237.** பாடு பெறுதியோ நெஞ்சே! கொடியார்க்கென்
வாடுதோள் பூசல் உரைத்து.

**1238.** முயங்கிய கைகளை ஊக்கப் பசந்தது

